தஞ்சாவூர் ஆறாவது உலக சைவ மகாநாட்டில்
வாசித்தளித்த

# சைவ சித்தாந்த கை நூல்





ஆக்கியோன் :
சிவநெறிச் செல்வர், சைவநன்மணி,
ஞானவாரிதி
இரா. மயில்வாகனம், ஜே. பி.

# அணிந்துரை

1997ஆம் ஆண்டு திசம்பரில் தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் நடந்த ஆறாம் உலகச் சைவ மாநாட்டில் ஆய்வுக் கட்டுரைகள் வாசிப்பதற்கென உ.சை. பேரவை இலங்கைக் கிளையிலிருந்து அழைப்புப் பெற்ற எட்டு சைவ அறிஞர்களுள் சிவநெறிச் செல்வர், சைவநன்மணி, ஞானவாரிதி ஆகிய திரு. இரா. மயில்வாகனமும் ஒருவராவர். சைவ ஆராய்ச்சிகளின் முன்னேற்றத்திற்கு இத்தகைய மாநாடுகளில் பங்கேற்று ஆய்வுகளை முன்வைத்தல் வரவேற்கப்படவேண்டிய முக்கிய நிகழ்வாகும். திரு. இரா. மயில்வாகனம் அவர்கள் இத்தகைபதொரு சைவ மாநாட்டில் பங்கேற்பதற்கான வசதிகளை செய்து கொடுத்ததுடன் இந்நூல் வெளியிடுவதற்கும் துணைபுரிந்த கொட்டாஞ்சேனை ஸ்ரீ வரதராஜ விநாயக ஆலய அறங்காவலர்களான திரு. ஈஸ்வரன், திரு. பீ. பாலசுந்தரம் ஆகியோருக்கு நான் நன்றி கூறவிரும்புகின்றேன்.

தஞ்சைப் பல்கலைக்கழகத்தில் திரு. இரா. மயில்வாகனம் அவர்களின் ஆய்வுக்கட்டுரை பெரும் வரவேற்பினைப் பெற்றது. அவருக்கு அங்கு வழங்கப்பட்ட நேர வரையறை காரணமாக அவர் தமது கருத்துக்களை சுருக்கமாகவே கூறிமுடிக்க நேரிட்டது. அவரது ஆய்வுக்கட்டுரைப் பொருள் விரிவுபடுத்தப்பட்டு நூல் வடிவில் வெளிவர வேண்டுமென்பது எனதும் வேறும் பலரதும் விருப்பமாகும். இந்த விருப்பவேண்டுகோளின் விளைவே இந்நூலின் வெளியீடாகும்.

இந்நூல் ஆசிரியரின் இம்முயற்சி மிக போற்றற்குரியது. இந்நூல் சைவ உலகில் மிகச் சிறந்த வரவேற்பினைப் பெறவேண்டுமென எல்லாம் வல்ல இறைவனை வேண்டுகின்றேன்.

கா. தயாபரன்
*உலக பேரவை இலங்கைக் கிளைத் தலைவர்,*
*உலக சைவப் பேரவை உதவிச் செயலாளர் நாயகம்*



# சிறப்புரை

வரதராஜ விநாயகர் கோவிலிலே ஒரு பெரியவர். அவர் எங்கள் ஆசான், வழிகாட்டி, அன்புள்ளம் கொண்டவர். அடிக்கடி எங்கள் கோவிலிலே சிரித்த முகத்துடன் நெற்றியிலே பட்டையாக விபூதியிட்டு சந்தனப்பொட்டும் குங்குமமும் மிளிர என்னைப் பார்க்கும்போதெல்லாம் அன்புவார்த்தைகள் பேசும் தங்க மனம் கொணட்வர். அவரைச் சந்திப்பவர்களுக்கு மகிழ்ச்சியையும் நம்பிக்யையையும் தருபவர். இவர்தான் திரு. மயில்வாகனம் மாஸ்ரர் அவர்கள்.

வாழ்பவர்களெல்லாம் வாழ்க்கையில் சுவடுவிட்டுச் செல்வதில்லை. வாழ்நாளிலே பிறருக்கு இம்மியளவேனும் உதவிக்கொண்டேயிருக்க வேண்டும். அவர்கள்தான் உண்மையில் உலகத்திலே உயிருடன் நடமாடுபவர்களென்று மறைவகுத்த வள்ளுவன் பேசுகின்றான். "ஒத்தறிவான் உயிர்வாழ்வான் மற்றையான் செத்தாருள் வைக்கப்படும்" என்பது வள்ளுர் வாக்கு. பாரதியும் "வல்லமை தாராயோ இந்த மாநிலம் பயனுற வாழ்வதற்கே" என்று தேவியிடம் வேண்டினான். திரு. மயில்வாகனம் அவர்கள் பிறர் சிறந்த சைவனாக வாழவேண்டும் என்ற பெருநோக்கு கொண்டு எழுதப்பட்ட நூல்தான் "சைவ சித்தாந்த கைநூல்".

மக்கள் தொண்டே மகேசன் தொண்டு என சைவப்பெரியார்கள் அனைவரும் திரும்பத்திரும்ப சொல்லியிருக்கிறார்கள். பகவான் ஸ்ரீ சத்திய சாயிபாபா வலியுறுத்தும் கருத்தும் இதுவே. மக்களை நல்வழிப்படுத்தும் முயற்சியின் ஒரு வடிவம்தான் இந்தக் கைநூல். பல புத்தகங்களை விற்றுப் பணம் சேர்க்க எண்ணிணாமல் அவரது தொண்டு மனப்பான்மையின் காரணமாக பிரசுரிக்கப்படுகின்றது. புத்தகங்களில் பெரும்பான்மையானவை சைவமுன்னேற்றச் சங்கங்களுக்கு இலவசமாகக் கொடுக்கப்படுகினற்ன. பெரியவரே உங்கள் தொண்டு மேன்மேலும் வளர எங்கள் ஸ்ரீ வரதராஜ விநாயகரை வேண்டுகின்றேன்.

தெ. ஈஸ்வரன்

உ
சிவ சிவ

# ஆறாவது உலக சைவ மகாநாடு
## தஞ்சையூர் பல்கலைக்கழகம்
## 19 – 21 டிசம்பர் 1997

## இறை, உயிர், தளை சைவ சித்தாந்தம்
## வாசித்துரைத்த வினையால் விழைந்த

# *சைவ சித்தாந்த கை நூல்*


ஆக்கியோன் :
*சிவநெறிச் செல்வர், சைவநன்மணி,*
*ஞானவாரிதி*
இரா. மயில்வாகனம், ஜே. பி.



*வெகுதானிய வருடம் செப்டெம்பர் மாதம்*
*13ம் திகதி ஞாயிற்றுக்கிழமை.*

உ

# நூற்பதிப்பு


நூலின் பெயர் : சைவ சித்தாந்த கைநூல்.

நூலாசிரியர் : சைவநன்மணி, சிவநெறிச்செல்வர், ஞானவாரிதி இரா. மயில்வாகனம்.

வெளியீடு : திருமதி மங்கையர்க்கரசி மயில்வாகனம்.

விலை : 100/-

நூல் உரிமை : திரு. மயில்வாகனம் – சுதாகரன்

அச்செழுத்து : லக்ஷ்மன் – 11 புள்ளிகள்

நூல் அளவு : 1/8

பக்கங்கள் : 96 பக்கங்கள்

அச்சுப்பதிவு : யுனி ஆர்ட்ஸ் (பிறைவட்) லிமிடெட், 48 B, புளுமெண்டால் வீதி, கொழும்பு – 13.


# பொருளடக்கம்

SIXTH WORLD SAIVA CONFERENCE

(19-21, December, 1997)

TAMIL UNIVERSITY, THANJAVUR

**PARTICIPATION CERTIFICATE**

This is to certify that திரு. இரா. மயில்வாகனம் கொட்டாஞ்சேனை, கொழும்பு has actively participated in the deliberations of the seminar session of the Sixth World Saiva Conference held at Tamil University, Thanjavur, Tamilnadu, India from 19th to 21st December 1997.

He/She has presented a paper / lecture on சைவ சித்தாந்தம் : இறை, உயிர், தளை......



Dr. G. Bhaskaran
Organizing Secretary
Sixth World Saiva Conference

Dr. K. Karunakaran
Vice-Chancellor
Tamil University

# வாழ்த்துச் செய்தி

சைவ நன்மணி இரா. மயில்வாகனம் அவர்கள் எழுதியுள்ள 'சைவ சித்தாந்த கைநூல்' என்னும் புத்தகத்திற்கு வாழ்த்துரை வழங்குவதில் பெரு மகிழ்ச்சியடைகிறோம்.

சென்ற ஆண்டு தஞ்சையில் நடைபெற்ற ஆறாம் உலக சைவ மகாநாட்டில் 'சைவ சித்தாந்தம் – இறை, உயிர், தளை' என்ற தலைப்பில் அவர் சமர்ப்பித்த கட்டுரையின் விரிவாக்கமே இப்பொழுது இந்நூலுருவம் பெற்றுள்ளது.

திரு. மயில்வாகனம் அவர்கள் ஏற்கனவே பல சமய நூல்களை எழுதி, தமிழ் மக்கள் அனைவரும் நன்கறிந்த ஒரு அறிஞராகியுள்ளார். இப்பொழுது அவர் படைத்துள்ள இந்நூல் அவரது பெருமையை இன்னும் விரிவடையச் செய்துள்ளது.

உடல் தளர்ந்த நிலையிலும், உள்ளத்திலே சிறிதும் தளராதவராக, இளைஞர்களுக்கே உரித்தான இளம்துடிப்புடன் விளங்கும் திரு. மயில்வாகனம் அவர்கள் இன்னும் பல்லாண்டுகள் ஆரோக்கியத்துடன் வாழ்ந்து சமயப்பணி புரிய இறைவன் அவருக்கு எல்லா நலன்களையும் வழங்கப் பிரார்த்திக்கிறோம்.

சைவ சித்தாந்த நூற்தொகுதியில் இந்நூலும் ஒரு முக்கிய இடத்தைப் பெறும் எனலாம்.

சுவாமி ஆத்மகனாநந்தா



உ

சைவமும் தமிழும் சைவசித்தாந்தமும் தனிவழி போகாது
தெய்வத்தை தேர்ந்து வழிநடக்க உதவிய
சிவநந்தி அடிகள் திருத்தாள் வணக்கம் வணக்கம்

இரா. மயில்வாகனம்



★ W.S.C. Internet : URL : http : / / www. Malaysia.net / people / Subas /

**WORLD SAIVA COUNCIL**

**INTERNATIONAL LONDON (U.K.) HEADQUARTERS**

சிவாய நம :


H.H. SWAMI SIVA NANDHI ADIKALAAR
CHAIRMAN, AND CHIEF EXECUTIVE
WORLD SAIVA COUNCIL
C/o LONDON MEIKANDAAR AADHEENAM
72, KING EDWARD ROAD
LONDON E17 6HZ
UNITED KINGDOM

Phone : 181-531-6435
FAX : 1268-561805


WORLD SAIVA COUNCIL · ANBE SIVAM · உலக சைவப் பேரவை

Established in Madras, 29-2-92


இலண்டன் மெய்கண்டார் ஆதீனம்
உலக சைவப் பேரவை
CENTRAL EXECUTIVE
தலைமைச் செயலகம்
From :: தவத்திரு சிவநந்தி அடிகளார்
Chief Executive : W.S.C. (H.Q.)
C/o London Meikandaar Aadheenam
72, KING EDWARD ROAD
LONDON E17 6HZ
UNITED KINGDOM


(Ref :- 29 May '98

**அருளாசி வாழ்த்துரை**

போற்றி ஓம் நமச்சிவாய.

இன்றைய உலகசமய அரங்கில் நமது சைவசமயம் சிறந்து விளங்காததற்கான பல்வேறு காரணங்களில்: மதமாற்றம், சைவசமய அறிவின்மை, சைவப்பிரசாரமின்மை முக்கியமானவை. எனவே, சைவ சித்தாந்த விளக்க நூல்கள் பல வெளிவர வேண்டியது காலத்தின் தேவை; கற்றறிந்த பெரியோர் கடன்.

இந்தச் சூழ்நிலையில் "சிவநெறிச் செல்வர்" இரா. மயில்வாகனம் ஜே.பி அவர்கள் "சைவ சித்தாந்தம்" என்ற தலைப்பில் உலக சைவப் பேரவையின் 6வது தஞ்சை மாநாட்டில் நான் படித்த ஆராய்ச்சிக் கட்டுரையை விரிவுபடுத்தி நூலாக்கி வெளியிடும் சீரிய அவரது சிவப் பணியைப் பாராட்டி வாழ்த்துகின்றேன்.

"மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்."

அன்பே சிவம்,

சிவ சிவ
29-5-98

AUM NAMASIVAYA; ANBE SIVAM, ONRE KULAM: THIRUKKURAL OUR ETHICS, THIRUMURAI OUR SCRIPTURE

A VISION WITHOUT A TASK IS BUT A DREAM ONLY
A TASK WITHOUT A VISION IS MERE DRUDGERY
A VISION WITH A TASK CAN ALONE CHANGE THE WORLD

# அணிந்துரை

"சைவ சித்தாந்தம்" என்னும் இந்நூல் இலங்கையைச் சேர்ந்த சைவப் பெரியார் இரா. மயில்வாகனம் என்பவரால் எழுதப்பெற்றது. தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் நடந்த ஆறாம் உலகச் சைவ மாநாட்டில் (திசம்பர் 19–21, 1997) இவ்வாசிரியர் படித்த ஆய்வுக் கட்டுரையின் விரிவாக இந்நூல் வெளிவருவதையிட்டு, அம்மாநாட்டு அமைப்பாளர் என்ற வகையில் மிகவும் மனமகிழ்வு அடைகின்றேன். இவர் அனுபவம் முதிர்ந்தவர். இந்நூலினை இவர் எழுதத் தகுதி உடையவர். முன்னரே சமயச் சார்பான நூல்களை இவர் எழுதியுள்ளதாக அறிந்து மகிழ்கிறேன்.

"சைவம் சிவத்துடன் சம்பந்தமானது" எனக் குறிப்பிடும் முதல் தமிழ் நூல் திருமந்திரமாகும். "சைவ சித்தாந்தம்" என்ற சொல்லைக் கூறும் முதற்றமிழ் நூலாகவும் திருமந்திரம் திகழ்கின்றது. இதனைத் 'தமிழ் ஆகம நூல்' எனவும் வழங்குவர். அந்நூல் கூறும் சீரிய சிந்தனைகளை இந்நூலில் ஆசிரியர் நன்கு குறித்துள்ளமை பாராட்டத்தக்கது. சைவ சித்தாந்தம் பற்றி அறிய விரும்புகின்றவர்களுக்கு இந்நூல் மிகவும் பயனுள்ள நூலாகும்.

'சித்தர்கள் கண்ட வாழ்க்கைத் தத்துவமே சித்தாந்தம்' என்ற ஆசிரியரின் கருத்து மேலும் ஆராயத்தக்கதொன்றாகும்.

மேன்மைகொள் சைவ நெறியைப் பரப்புவதைப் பணியாகக் கொண்டியங்கும் சைவப்பெரியார் இரா. மயில்வாகனம் அவர்களை நான் பாராட்டுகின்றேன். இந் நூலாசிரியர் மேலும் பல நூல்களைத் தருவதன் மூலம் சைவத் தமிழ்த்தொண்டைத் தொடர்ந்து நடத்த இறையருள் துணை நிற்குமாக.

க. பாஸ்கரன் *M.A, M.Phil, Ph.D*
*இயக்குனர் மன்றம் பேராசிரியர்,*
*தத்துவ மையம்,*
*தமிழ்ப் பல்கலைக்கழகம்,*
*தஞ்சாவூர் 613 005.*



# அணிந்துரை

சைவத்திரு இரா. மயில்வாகனம் அவர்கள் அரிதினும் முயன்று நல்லவோர் கட்டுரையை எழுதி சைவச் சிந்தனையை வளர்ப்பதற்கு பெரிதும் உதவியிருப்பதோடு அதனை நூல் வடிவிலும் வெளியிட முன்வந்திருப்பதைக் கண்டு உலக சைவப் பேரவை பெரிதும் மகிழ்கின்றது. பேரவையின் தஞ்சையில் நடந்து முடிந்த 6வது உலக சைவ மாநாட்டில் வாசித்து அளிக்கப்பட்ட கட்டுரையை இன்னும் விரிவாக்கி வளர்த்து இச்சிறு நூலினை வெளியிடுகின்றார் பழுத்த சிவஞானப் பழமாகிய மயில்வானம் அவர்கள். பெரிதும் போற்றக்கூடியதாக அமைந்திருப்பது சைவ சிந்தனைக்கும் தொல்காப்பியர் இரண்டு ஆயிரம் வருடமடங்கு முன்பே வாழ்கையை நெறிபட ஆய்ந்து கண்ட உன்மைகட்கும் ஓர் முடிச்சுப்போட்டுச் செல்வதேயாகும். சைவர்கள் இதுவரை நல்ல வரலாற்று ஆசிரியர்களாக இருந்ததில்லை. அந்த குறையினை போக்கும் வகையில் இச்சிறு நூல் அமைந்திருப்பது மிகவும் பாராட்டக் கூடியவொன்றாகும். தொல்காப்பிய காலத்திலிருந்து எவ்வாறு சைவச் சிந்தனை சைவத்திருமறைகள் அதிலும் குறிப்பாக தேவாரத்திருவாசகங்கள் திருமந்திரம் ஊடே வளர்ந்து மெய்கண்ட சாத்திரங்களில் முழுமை அடைந்தது என்பதை திறம்படி விளங்கிச் செல்லும் நயம் மிகவும் பாராட்டத்தக்க வொன்றாகும். எனது ஒரே குறை இன்னும் பெரிய அளவில் வந்திருப்பின் நல்லவொரு சைவசித்தாந்த வராற்று நூலாக இது அமைந்திருப்பதே என்பதுதான்.

சைவப்பெரியார் மயில்வாகனம் அவர்கள் திருமுருகனின் மயிலேறி ஞானவுலகம் புகுந்து ஞானவேற்கொண்டு அஞ்ஞான அசுரர்களை வென்று இன்னும் இன்னும் இதுபோன்ற நல்ல பல ஞானநூற்களை எழுதி மகிழ தில்லைக்கூத்தனை மனமாக இரைஞ்சுகின்றோம்.

முனைவர் கி. லோகநாதன்
*செயல் நாயகம்*
*உலக சைவப் பேரவை*

# ஆறாம் உலகச் சைவ மகாநாடு
## நுழைவாயிலில்



கடவுள் வணக்கம்

*சிந்தையிறை சேர்ந்தவுயிர் பந்தமெனும் தளைகளையும்*
*புந்திவரு புல்லறிவால் போற்றுதற்கு – வந்தணைந்து*
*அந்திநிறத் தந்திமுகத் தொந்திவயிற் றைங்கரனே*
*முந்திவந்து முன்னின் றருள்*

சிவமணம் கமழும் சிவநெறியாளர்கள் கூடிச் சிந்தனை செய்யும் சிவம் விளங்கும் தஞ்சை நகர உலகசைவ ஆறாவது ஆராய்ச்சி மகா நாட்டிலே அடியேன் சிவனருள் மேற்கொண்டு சிந்தனை செய்து கட்டுரைவாசிக்க மேற்கொண்ட பொருள் சைவசித்தாந்தம்.

மக்கள் ஈடேறுவதற்குச் சமயம் இன்றியமையாதது. அவர்கள் பண்பாட்டிற்கேற்பச் சமயங்கள் பலவாயின. எனினும் எல்லாச்சமயங்களும் ஒருவனே கடவுள் என்ற கொள்கையுடையன. துறைமுகங்கள் பல ஆனால் கடல் ஒன்றே எல்லாத் துறைகளையும் பெற்றுள்ளது. கடல் என்ற பொருளில் எல்லாத் துறைமுகங்களும் அடங்கும். துறைமுகம் ஒன்றன் பொருளில் கடல் முழுதும் கட்டுப்படாது. ஊர்கள் பல எல்லாம் உலகம் என்றதனுள் அடங்கும். இங்ஙனமே கடவுளுக்கு வழங்கப்படும் எல்லாப் பெயர்களும் கடவுள் என்ற ஒன்றுள் அடங்கும். மேல் மாடத்துக்கு ஏற்றும் படிகள் போன்றன சமயங்கள். எல்லாச் சமயங்களும் அவரவர் கொண்ட தத்துவ எல்லைக்களவான பயனுள்ளவை.

இறை தத்துவத்தினை நாம் எத்துணைக் காலமிருந்து ஆன்று அவிந்த சான்றோர்களின் கொள்கைகளைக் கொண்டு ஆராய்ந்தாலும் அது வரையறையின்றி விரிந்து செல்லும் பெருமை பெற்றது. அது, இறைவழி நின்று மீட்சியடைந்த அநுபூதிமான்களின் அனுபவமுமாகும். எனினும் மூத்த தலை முறையான நற்கீரருடைய திருமுருகாற்றுப்படை, கயிலைபாதி, காளத்திபாதி,

போற்றிக்கலி வெண்பா முதலியனவும் திருமூலரின் திருமந்திரம் இடம்பெற்ற திருமுறைகளும் கண்டனவெல்லாம் மோனமாகக்கருதி அஞ்சலி செய்யும் கச்சியப்ப சுவாமிகளது கந்தபுராணமும் எவ்வாறு எனது கட்டுரையைக் கட்டவிழ்ந்தன என்பதை அறியக்கூடியதாய் இருக்கிறன.

எல்லாப் பொருள்களையும் தன்னுளடக்கி யாவற்றையும் கடந்திருப்பது கடவுளுடைய ஒரு தன்மை. இங்ஙனம் புறத்தே வியாபித்திருத்தலோடு அமையாமல் எல்லாப் பொருள்களின் உள்ளே தங்கியிருத்தலும் கடவுளுடைய ஒரு தன்மையாகும். கடந்திருத்தல் உள்ளிருத்தல் என்ற இரண்டு குணங்களும் கடவுளின் இயல்பான குணங்கள். இதனாலே கட எனவும் உள் எனவும் உள்ள இரு சொற்களையுஞ் சேர்த்து கடவுள் என ஒரு நாமம் இட்டனர் பெரியோர். இந் நாமத்தை வேறு சொல்லாற் கூறுகையில் சிவம் என வழங்கினர். சிகரம், சிவம், வகரம் அவரது சத்தி, சிவ என்ற சொல்லில் சிகரம் கடந்து நின்றலைக் குறிக்கும் குறியாகும். வகரம் உள்ளீடாக நின்றலைக் குறிக்கும் குறியாகும். இதனால் கடவுள் என்ற சொல்லும் சிவம் என்ற சொல்லும் ஒரே கருத்துடைப் பொருட்கள் என்று நாம் உணரலாம்.

சிவம் வியாபகமுடையது. வியாபகமாவது கலந்தும் கடந்தும் நிற்றல் என்பது சிவம் என்னும் சொல்லின் ஒரு பொருள் என்பர். ஆதலால் சிவமெனினும் கடவுளெனினும் ஒன்றே குறிக்கும் இதனின் மேம்பட்ட பொருள் ஏதும் இல்லை. யாவும் இப்பொருளின் வியாப்பியமாகும் இயல்புடையன. யாவற்றையும் தன்னுள் வியாப்பியமாகக் கொண்டுள்ள சிவத்தைப் பற்றியுரைப்பதே சைவம் எனப்படும். சிவசம்பந்தம் சைவம் என்பார் திருமூலர்.

*"சைவம் சிவத்துடன் சம்பந்தமாகுதல்,*
*சைவத்தையறிந்தே சிவம் சாருதல்,*
*சைவம் சிவத்தினைச் சாராமல் நீவுதல்*
*சைவம் சிவாநந்தஞ் சாயுச்சியமே"* **– 1512.**

சிவமே யாவற்றிலும் பெரியது. சிவத்தின் மேம்பட்ட பொருளிலது. ஆதலால் சைவமே யாவற்றிலும் சிறந்தது. சைவத்தின் மேம்பட்ட சமயம் ஒன்றில்லை என்பது சொல்லாமலே போதரும். இதனால் எல்லாச் சமயங்களையும் தன்னுட்கொண்டு எல்லாவற்றிற்கும் மேலானதான கொள்கையுடையதே சைவசமயம் என்பது தெளிவாகும்.

மரம் என்ற சொல்லில் கிளை முதலியனவும் மலர் முதலியனவும் ஆன எல்லா உறுப்புகளும் அடங்கும். சைவம் அங்கி ஏனைய சமயங்கள் அங்கம்.



இது பற்றியே சிவஞான சித்தியார் சுபக்கத்தில்,

*"ஓது சமயங்கள் பொருளுணரு நூல்கள்*
*ஒன்றோ டொன்று ஒவ்வாமல் உளபலவும் இவற்றுள்*
*யாது சமயப் பொருள் நூல் யாதிங்கெனில்*
*இதுவாகும் அதுவல்ல தெனும் பிணக்கமின்றி*
*நீதியினால் இவையெல்லாம் ஓரிடத்தே காண*
*நின்றதியா தொரு சமயம் அது சமயப் பொருள் நூல்*
*ஆதனினால் இவையெல்லாம் அருமறை ஆகமத்தே*
*அடங்கிடும் அவையிரண்டும் அரனடிக் கீழ் அடங்கும்"*

*சிவஞானசித்தியார் 264ம் செய்யுள்.*

என அருணந்தி சிவாசாரியாரால் கூறப்பட்டுள்ளது. ஏனைய சமய நூலாளர் தத்தம் சிற்றறிவுக்குப் புலனாயவாறு பற்றி அவ்வவ் நூல்களில் கூறப்படும் பொருள் இயல்புகளெல்லாம் முற்றுணர்வுடைய முதல்வனாற் செய்யப்பட்ட வேதாகமங்களிற் கூறும் பொருளியல்பின் ஏகதேசமாய்க் காணப்பட்டு அவற்றுள் அடங்கும். சிவபிரானாற் செய்யப்பட்டு அவனையே தமக்கு முதலாகக் கொண்டுரைக்கும் அவ்விருவகை நூலும் அவ்விறைவனின் திருவடியில் அடங்கும். இறை, உயிர், தளை என்னும் மூன்றேயான உட்பொருள்களை சைவசமயம் எடுத்துரைக்கின்றது. இம்மூன்றின் மேம்பட்டபொருள் எதுவுமில்லை. இம் மூன்றின் உண்மைகளை அளவையால் நிறுவியும் இவற்றின் பொதுவும், சிறப்புமான இயல்புகளை எடுத்தோதியும் இறையினை உயிர், தளை நீக்கி அடையும் முறையை அறிவித்தும் சுத்த அத்வத இன்பத்தை எடுத்து காட்டியும் முடித்துக் காட்டியும் முடித்துக் கூறுவது சைவ சமயமாகும்.

சைசித்தாந்தம் என்பது சிவனை முழுமுதற் கடவுளாக வழிபடுகிற தன்மையை உணர்த்துவதாகும். இத்தன்மை கி.மு. 3000 ஆண்டிற்கு முன் சிந்துவெளி நாகரிகத்திலே தொடங்கியதாக இருக்கும். இதில் உருவவழி அருவவழிபாடு என்பன காணப்படுகின்றன. தமிழ் மக்கள் வளர்த்தெடுத்து வருவது சித்தாந்தமாகும் இது சைவ சமயத்தவர்கள் கைக் கொள்ளும் போது சைவ சித்தாந்தம் எனப் பெயர் பெறுகிறது.

திருமூலர்

*"உடலான ஐந்தையும் ஓராறும் ஐந்து*
*மடலான மாமாயை மற்றுள்ள நீவப்*
*படலான கேவல பாசந் துடைத்துத்*
*திடமாத் தனையுந்நல் சித்தாந்த மார்க்கமே* (1439 திருமந்திரம்)

அன்னமய கோசம், பிராணமய கோசம், மனோமய கோசம், விஞ்ஞான கோசம் ஆனந்தமய கோசம் ஆகிய ஐந்தையும், மூலாதாரம் முதலிய ஆதாரங்கள் ஆறையும் ஐந்து பிரிவாக விளங்கும் அசுத்தமாயையாதி சிவதத்துவத்தையும் இவைகளின் சார்பான மற்றுள்ளவைகளையும் ஒழித்து அவற்றால் பிறவிக்கு முன்னே படலமாகவுள்ள பாசங்களை அழித்து உறுதியாகத் தன்னுடைய யதார்த்த நிலையை அறிந்து அதில் நிற்றலே சித்தாந்த நெறியாகும்.

இஃது சைவத்தின் பாற்படின் சைவசித்தாந்தமாகும். சைவதித்தாந்தத்தில் பிரமம், பசு, பாசம் மூன்றுமே உள்பொருள். ஆன்மா தன் முன்னைய வினைகளுக்கேற்ப பல உடல்களில் நின்று தொழில் செய்கிறது. முத்தியில் இறைவன் என்பேரானந்தத்தைப் பெறுகின்றது. சைவ சித்தாந்தம் (பதி, பசு, பாசம்) இறை உயிர், தளை என வேறு வேறாக வகுத்து விரித்தாலும் ஒன்றோடொன்று தொடர்புடையன. எந்தவித ஆராய்ச்சி முறை யானும் மிகமிக வருத்தப்பட்டு யோசித்து எழுத முற்பட்டாலும் எல்லா இடங்களிலும் இச் சொற்கள் வரப்பெறாமல் இல்லை. சைவசித்தாந்தத்தின் உட்பொருள்களையிட்டு சுமார் 6ம் நூற்றாண்டுகளில் உருவாக்கப் பெற்ற மணிமேகலையில் சைவத்தையிட்டு கூறுவதைக் காணலாம் .

சமயக் கணகர் தந்திரங் கேட்ட காதை 85 ஆவது வரி

*"இவையே யிப்போ தியன்றுள வளவைகள்*
*என்றவன் றன்னை விட்டிறைவ னீசனென*
*நின்ற சைவ வாதிநேர் படுதலும்*
*பசு நின்றயெவ்வ மெப்படித் தென்ன*
*இரு சுடரோடிய மானனைம் பூதமென்"*

உயிரின் உள்பொருள் என்னும் விளக்கத்தில் ஒரு பொருளின் உண்மையை அளவை காண்டல் முதலிய இலக்கணங்களால் விளக்கினோம் என்பதில் காண்க.





கற்பன கற்றக் கலைமன்னு மெய்யோகர்
முற்பத ஞான முறைமுறை நண்ணியே
தொற்பத மேவித் துரிசற்று மேலான
தற்பதங் கண்டுளோர் சைவசித்தாந்தரே.

சைவசித்தாந்தம் முப்பொருள்களைப் பற்றிக் கூறுவது. அவை கடவுள், உயிர், உலகம் என்பன. இவை என்றும் உள்ள பொருள் எனவே இவற்றைச் சத்துப் பொருள்கள் என்பர். இவை வெவ்வேறு இயல்புள்ள மூன்றாகையால் வேறு பிரித்தறிவதற்காகச் சிவசத்து, சதசத்து, சடசத்து என்பர். இவற்றை சாஸ்திரங்கள் விரித்துக் கூறுகின்றன. அது போலவே சைவ சித்தாந்த கைநூல் என்பதிலும் இயன்றளவு கூறி இருக்கிறது.

சிவத்தின் இயல்பு ஞானமும் அனந்தமுமாம். ஞானம் சத்து, சித்து ஆகிய தன்மைகள். சத்து என்றும் உள்ளதன்மை, சித்து சுயம்பிரகாசமானது. ஆனந்தம், எண்குணங்களையுடையது. எண்குணத்தான் என்பர் திருவள்ளுவர். உபநிடதங்களும் அவரை அவ்வாறே புகழ்கின்றன.

## எண்குணங்கள்

1. சர்வஞ்ஞை – முற்றறிவுடையனாதல்
2. திருப்தி – வரம்பிலின்பமுடைமை
3. அநாதிபோதம் – இயல்பாகவே பாசமின்மை
4. சுவதந்திரத்துவம் – தன்வயமுடைமை
5. அனுப்த சக்தி – பேரருளுடைமை
6. அனந்த சக்தி – முடிவிலாற்றலுடைமை
7. நிராமயான்மா – இயற்கை உணர்வினறாதல்
8. விசுத்ததேகம் – தூயவுடம்பினனாதல்

## திருமேனிகள்

அருவத்திருமேனி – நாதம், விந்து, சக்தி, சிவம்
அருவுருவத்திருமேனி – சிவலிங்கம்
உருவத்திருமேனி – பிரமன், விஷ்ணு. உருத்திரன், மகேசுவரன்

## ஐந்தொழில் விளக்கம்

| | | |
|---|---|---|
| சிருஷ்டி | – | இறைவன் ஆன்மாக்களுக்காக மாயா கருவிகளைப் படை த்து அறிவு விளக்கஞ் செய்தல். |
| திதி | – | மாயாகாரியங்களை நிறுத்தி அறிவை நிலைக்கச் செய்தல். |
| சங்காரம் | – | மாயாகருவிகளை ஒடுக்கி அறிவைப் போக்குதல். |
| திரோபவம் | – | அருளைக் கொண்டு மலசக்திகள் மூலம் ஆன்ம அறிவை மறைப்பித்துக் கன்மங்களை நிறுத்துதல். |
| அருள் | – | ஆன்மாக்களுக்கு இன்பதுன்பங்களைப் புசிப்பித்து வினைகளை அறுத்தல். |

## ஆன்மதத்துவம் அமையும் வகை

| | | |
|---|---|---|
| பூதங்கள் | – | பிருபவி, அப்ப, தேயு, வாயு, ஆகாயம் – 5 |
| தன்மாத்திரைகள் | – | சத்தம், ஸ்பரிசம், ரூபம், இரசம், கந்தம் – 5 |
| ஞானேந்திரியங்கள் | – | மெய், வாய், கண், மூக்கு, செவி – 5 |
| கன்மேந்திரியங்கள் | – | வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தம் – 5 |
| அந்தக்கரணங்கள் | – | மனம், புத்தி, சித்தி, அகங்காரம் – 4 |

## வித்தியாதத்துவம் அமையும் வகை

காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை.

## சிவதத்துவம் அமையும் வகை

நாதம், விந்து, சாதாக்கிய்ம, ஈசுரம், சுத்தவித்தை

| | | |
|---|---|---|
| ஆன்மதத்துவம் | – | 24 |
| வித்தியாதத்துவம் | – | 7 |
| சிவதத்துவம் | – | 5 |
| | | 36 |

ஆகவே தத்துவங்கள் 36.






### பசு - (உயிர்)

பசு என்பது பலவாய உயிர்களின் கூட்டம்
உரைதரும் இப்பசுவர்க்கம் உணரில் மூன்றாம் ஆகவே
சித்தாந்த சாஸ்திரவிதிப்படி இஃது மூவகை ஆன்மாவாகிறது



## பாசம் (தளை)

ஆணவம் :– விகற்பம், கற்பம், குரோதம், மோகம், கொலை, அஞர் (சந்ததமும் துக்கப்படுதல்) மதம், நகை

கன்மம் :– இருத்தல், கிடத்தல், விடுதல், இயற்றல், பரநிந்தை, (பிறன்பழிகூறல்), மேவல் (பலபிறப்புக்களில் மேவுதல்)

### கன்மம் மூவகை



சஞ்சிதம் (தொகைவினை) | பிரார்த்தம் (துவக்கவினை) | ஆகாமியம் (மேல்வருவினை)

மாயை :– சுத்தமாயை, அசுத்தமாயை, பிரகிருதி மாயை, மாயையின்காரியங்களே தனு, கரணம், புவனம், போகம்.

தனு :– பஞ்சபூதங்களும் அவற்றின் காரியங்களும் கூடிய பூததேகம்.

கரணம் :– மனம், புத்தி,சித்தம், அகங்காரம் ஆகிய உட்கரணங்கள்.

புவனம் :– கன்மம் புசிப்பதற்கு உண்டான இடம்.

போகம் :– புசிப்பாயுள்ள சத்தம், ஸ்பரிசம், ரூபம், இரசம், கந்தம்.

சைவ சித்தாந்தம் என்னும் மாபெருங்கடலில் மழைத்துளி போன்றது எனது சைவசித்தாந்த அறிவு. தலையங்கம் என்னைத் தடுமாறவைத்தது. ஆறாவது. உலக சைவப் பேரவை தஞ்சாவூரில் நடந்தபோது இறை உயிர் தளை என்னும் பெரிய தலைகளை கைவைத்து கட்டுரையைக் கட்டவிழ்க்க ஸ்ரீவரதராஜபெருமான் வரந்தந்தார் 19.21.1997 டிசமப்ரில் தஞ்சாவூர் பல்கலைக் கழகத்தில் வாசித்து விருதும் பெற்றேன் இது முதலாவதாக இரண்டாவதாக இங்குள்ள நடத்துனர்களாக முனைவர் சி. லோகநாதன் செயல்நாகம் அவர்களும் , இயக்குனர் மன்றப் பேராசிரியர் க. பாஸ்கரன் M. A., M. Phil, Phd. தமிழ்ப்பல்கலைக்கழகம் அவர்களுக்கும் மூன்றாவதாக உலக சைவப் பேரவை இலங்கைக் கிளைத் தலைவர் திரு. கா. தயாபாரன் அவர்களுக்கும் தொடக்க உரையாக உள்ளனவற்றைத் துணையாகக் கொண்டு நூல் நூற்று துணியாக்க வேணடும் என மனநிறைவுடன் கூறினார்கள்.



மேலே கூறியவர்களின் தலைவராக உலக சைவப் பேரவை பேரியோர் திருவாடுதுறை ஆதினத்தின் இருப்தோராவதின் பின் தலைமை யேற்ற சிவநந்தி அடிகளார் வழி மொழிந்து வாழ்த்துரையும் தந்தார் எனவே என்கனவு பலித்தது. சித்தாந்தக் கொள்கைகளையும் சைவசித்தாந்த கருத்துரைத்த நூல்களையும் கண்டுகொள்ள கண்கொண்டேன் அவைகளின் அமைபுகளே இச்சிறு சைவசித்தாநத் கைநூலின் கருத்துக்களாகும் எனது அறிவு நிறைவற்றது குறைவுள்ளது ஆயினும் கூடிய அளவு எழுதி உள்ளேன்.

இவ்வாறு ஆற்றுபடுத்தி ஆய்வரங்கில் அமரவைத்த பெரியோர்களுக்கும் மனமார்ந்தநன்றி உரித்தாகுக.

*'அளவிலா அருமை பெருமை யுளதாய்*
*அளவில் இறை, உயிர், தளைகளை இயம்பிய*
*இளவறிவுடை சிறியோன் பிழைகளை பெரியோர்*
*அகழ்வார தாங்கும் நிழல்போல் ஆற்றுவாரே.'*

# குருவே தெய்வம்

நமக்குவழி காட்டுகின்ற, நாம் வழி படுகின்ற மதிப்புக்குரியவராகத் திகழ்பவர் குரு ஆவர். குரு என்னும் பதம் ஒரு பதம் அன்று கு + ரு என்னும் இருபதங்கள் சேர்ந்த ஒரு பதம். கு = இருள். ரு = அருள். கு என்றும் அசுத்தாவத்தையில் நின்ற உயிரினை ரு என்னும் சுத்தாவத்தையில் நின்ற வண்ணம் நிறுத்துபவர் குரு ஆகிறார். இதைச் செய்கிறவன் இறைவன் என்பது பல்லோர் கருத்து. தெளிவினைக் கொடுத்து பிரகாசிக்கச் செய்பவர் எவரோ அவரே குரு ஆவர்.

கந்தருனு பூதியில் கச்சியப்ப சுவாமிகள் "குருவாய் வருவாய் அருள்வாய் குகனே என வேண்டிக் கொண்டார். பன்னரும் வேதங்கள் படித்து உணர்ந்தாலும் குருவருள் இன்றேல் திருவருள் இன்று என்பது உறுதி. "கேட்டுக்கல்லாத கல்வி சூட்டாலும் வராது என்பது முதுமொழி.

பாலினுள் வெண்ணெய், நெய், மோர் அடங்கியுள்ளன அவற்றைப் பாலிலிருந்து பெற வேண்டுமானால் உறை மோர் தேவை. பால்மணம் படைத்த சீடனுக்கு குரு மூர்த்தி. உறையாக இருக்கிறார். அவர் திருவுருவின் முன் சீடனின் பால்மணத்தின் ஒளி ஒன்று பளிச்சிடுகிறது. அந்த ஒளியுடன் குருநாதரின் உபதேச ஒளியுஞ் சேர அந்த சீடன் என்ற பாலில் உறை கலந்து விடுகிறது. குரு ஆசிகளைப் பெற்று திரும்பும் சீடனுக்கு குரு சூக்குமாய் இருந்து வழிகாட்டுகிறார். சீடன் பாலில், தயிர், நெய், வெண்ணெய் பொங்கி வெழிவருவது போன்று அனைத்து ஞானங்களையும் பெறுகிறான்.

குருவைப் பின்பற்றி பரிபூரணமாய் சரணடைவதின் மூலம் சீடன் துன்பங்களின் அடிப்படை அகந்தையை நசுக்கி விடலாம் என்று பகவான் ரமணர் பகவத் வாசாருமிர்த மென்ற திருவருள் மொழியில் குறிப்பிட்டுள்ளார்.

குரு என்று சொல்வதும் சீடன் என்று சொல்வதும் சீடனின் நிலையைப் பொறுத்ததே. தன்னை உணர்ந்தவனுக்கு குரு என்ற பேதம் இல்லை. உண்மையான குரு சீடனாகவும் மாறி அவனுடன் கலந்து விடுகிறான். பின்னால் இருவரும் ஒன்றாகி நிற்பதே யதார்த்தமான குரு சீடத்துவம். குரு தன் சத்தியின் பலனால் சீடனின் நான் என்ற அகங்கார உணர்வை அழிக்க முனைகின்றார். நான் அழியத் தோன்றுவான் ஈசன்.



தட்சணாமூர்த்தியின் முன் சீஷ்சர்களான ஜனகர், ஜனந்தரர், ஜனாதனர் ஜனக்குமாரர் நால்வரும் அமர்ந்தனர். குரு முத்திரையைக் காட்டி மௌனியாகவே இருந்தார். சிஷர்கள் உணர்ந்தனர். தம்மை உணர்ந்ததைக் கண்டு மானச ரீதியாக ஜீவாத்மா பரமாத்மாவைக் கண்டு கொண்டது.

சிஷ்சன் மடியில் தலையைவைத்து கண்ணயர்ந்தார் குரு அவ்வேளை மானசரீதியாக வழிபட்டுக் கொண்டிருந்த சீஷன் அவரது தலையை மெதுவாக மடியால் இறக்கி திடீரென எழுந்து நின்று தன் உடையை சிவ சிவா என்று கசக்கி விம்மி, விம்மி அழுதார். பின் "சரியாய் விட்டது என்று சொல்லி முன்போல் அமர்ந்தார். குரு திடீரென அதிர்ச்சியுற்று நடந்ததை வினவ சிதம்பரத்தில் ஆத்ரா தரிசனம் நடக்கும் வேளை தீபத்தை சிதம்பரேசரின் அண்மையில் வைத்து விட்டார் அர்ச்சகர் பெருமானின் ஆடையில் தீபற்றிக் கொண்டதைக் கண்டேன் அதை என் கைகளால் கசக்கி தணித்து விட்டேன் என்று சொல்லிக் குதூகலித்தார். சீஷன் குரு திகைப்புற்று இதன் உண்மையை அறிய ஒருவரை அனுப்பி நடந்தது உண்மைதான் என்பதை அறிந்தவுடன் குருசீஷயன் பாதத்தில் விழுந்து வணங்கி நீர் எனக்கு குரு என்று கூறி இறுகத் தழுவிக் கொண்டார். "சிறியதில் பெரியது தோன்றியது.

*"நம்மை நாமே உணர்ந்து கொண்டால் கடவுளை*
*உணர்ந்தவர்களாவோம்.*

*"தன்னையறியத் தனக்கொரு கேடில்லை*
*தன்னையறியாமல் தானே கெடுகின்றான்*
*தன்னை யறியும் அறிவை அறிந்தபின்*
*தன்னையே யர்ச்சிக்கத் தானிருந்தானே" (2355 திருமந்திரம்)*

உமாபதி சிவாசாரியார் குருவால் ஆட் கொள்ளபடுமுன் ஆலயத்திலிருந்து பகலில் ஒருவர் தீபமேந்திவர பல்லக்கில் வந்தார். அதைக் கவனித்த மறைஞான சம்பந்தர் "அதோபட்ட கட்டையில் பகற்குருடு போகிறது" என்று ஏழனமாய்க் கூறியது உபாபதி சிவாசாரியாரின் ஞானத்தை தொட்டது மறுகணமே பல்லக்கில் இருந்து குதித்த உமாபதி மறை ஞான சம்பந்தரின் காலில் விழுந்து பணிந்து நீங்கள் என் குரு என்று கூறி குருவாய் ஏற்றார். குருவான மறைஞான சம்பந்தர் ஒரு முறை தெருவழியே போகும் போது ஒருவரின் விருப்பப்படி அவர் கொடுத்த கூழைக் குடித்தார் வாயால் வடிந்த கூழை உமாபதி கையால் ஏந்திக் குடித்தார். அதுவே குரு அருட்பிரசாத மாயிற்று. குரு அருளுடன் இறை அருளும் பெற்று உமாபதியின் பெட்டகத்துள்

நாமிருக்கிறோம் என்று கூறிய அசரீரியைக் கொண்டே ஒறுத்திருந்த கொடியை உமாபதியின் "கொடிக்கவி, மூலம் ஏற்றி வைத்தார் இறைவன் திருபெருந்துறையில் குருந்தமர நிழலில் எழுந்தருளி இருந்த இறைவனின் நயன தீட்சையினால் குரு அருளுடன் திருவருளும் பெற்று உய்ந்தார் மணிவாசகப் பெருந்தகை.

நரேந்திரனின் மலத்தை நீக்க பகவான் இராமகிருஷ்ணதேவர் கண்டேன். காட்டுவேன் என்று கூறி நயனதீட்சை அளித்து சுவாமி விவேகாநந்தர் என்ற பெயருடன் இலங்க குரு அருளும் திருவருளும் நல்கினார்.

பக்தியும் சக்தியும் வாய்ந்த குருநாதர் ஆத்ம சாரதியாய் நின்று சாரத் தியாகம் செய்வார். அவருடைய திருவருள் ஜிவாத்மாவை பரமாத்வுடன் சேர்த்து சாயுட்ய பதியை நல்கும்.

சீடர்களின் இன்னல்கள், இடுக்கண்கள், நோய்கள் இவைகளைத் தாமே ஏற்று குணப்படுத்திய குருநாதர் பலர் இப்புண்ணிய பூமியில் வாழ்ந்துள்ளார்கள்.

சித்த சுத்தியும் சுத்த புத்தியும், குரு காட்டிய வழியை பின்பற்ற வழிவகுக்கும்.

அடியவர் வழிபாடும் அதன் வழித் தோன்றலான குருவின் வழிபாடும் உண்மையில் பரம்பொருள் வழிபாடே. பகவத் கீதை உபதேசித்த கண்ணனின் விஸ்வரூபத்தை பெற்ற அர்ச்சுணன் "நீயே அகிலத்தின் சிறந்த குரு என்று போற்றினான். இறைவனே குருவாக வந்து பதி, பசு, பாசம் இவைகளின் நிலையைக்காட்டி அதை நீக்கி அருள்புரிவார்.

*"சித்த சிவன் குருவாய் வந்து தூய்மை செய்*
*தத்தினை நல்கருள் காணா அதிமூடா*
*பொய்த்தரு கண்ணான் நமரென்பர் புண்ணியர்*
*அத்தன் இவனென் றடிபணிவாரே*

**திருமந்திரம் (1578)**

*"குருவே சிவனெக் கூறினன் நந்தி*
*குருவே சிவமென்பது குறித் தோரார்*
*குருவே சிவனுமாய் கோனுமாய் நிற்கும்*
*குருவே வுரை வுணர்வந்தோர் கோவேற்ற*

**திருமந்திரம் (1581)**



இறை உயிர், தளை என்பனவற்றை நுண்பொருளாக வாசிக்க இன்னல்படும்போது முன் நான் மட்டக்களப்பில் ஆசிரியராக இருந்தபோது திருவாளர் குமாரசுவாமி சோமசுந்தரம் அவர்கள் வித்தியா கர்த்தராக இருந்தார் அவருக்கு என்னறிவின் படி சைவமும், தித்தாந்தமும் ஓர் அளவுக்கு தெரியும் என்றும் தமிழையும், சைவத்தையும் இருகண்களாகக் கொண்டவர் என்றும் எண்ணினேன். அவரைப் பல முறை மேடைப் பிரசங்கங்களிலும் வானொலியில் சைவ நற்சிந்தனையிலும் அறிந்துள்ளேன். ஆகவே என்னால் இயன்றவரை எழுதி அப்பெரியாரைக் கொழும்பில் அணைந்து இன்னல்களை எடுத்தியம்பினேன் அவர் மனத்தின் அழகு மதியில் தெரியும் என்பதற்கொப்ப மனமுவந்து வாசித்து பின்வருமாறு கூறினார்.

சைவசித்தாந்தம் என்பது பரந்த விடயம் எனவே பத்து நிமிடங்களில் வாசித்து முடிப்பதற்கான ஆராய்ச்சிக் கட்டுரையின் தலைப்பு சைவசித்தாந்தம் என்னும் பெருந்தலைப்பாக இருக்கிறது அது குறித்த ஒரு அம்சம் பற்றிய ஆராய்ச்சியாக இருப்பது நல்லது. பல விடயங்களை ஒன்று சேர்த்துள்ளீர்கள். கருத்துக்களில் பிழை இல்லை. ஆனால் அவற்றுள் சில சர்ச்சைக்குரியவை. சைவசித்தாந்தம் தமிழர் தம் வாழ்க்கை நெறியிலிருந்து பிளிந்து எடுக்கப்பட்ட சாரம் இதை வேதாந்தத்தின் தெளிவாம் சைவசித்தாந்தம் என்றும் கூறுவர். 13ம் நூற்றாண்டில் தொகுக்கப்பெற்ற மெய்கண்டசாத்திரங்கள் சைவசித்தாந்தத்திற்கு இலக்கணம் அமைத்தன. சமரசம் காண விழைந்தவர்களால் தவறும் உண்டு. சிறுசிறு தலையங்கங்களில் இறை, உயிர், தளை என்றனவாகத் தனித்தனி ஆராய்தல் நல்லது என்றார்கள். எனினும் ஓர் விடயத்தில் பல கருத்துக்களும் வந்து சேர்வதுண்டு இறை நிறைவு செய்ய பின்வரும் நூல்களை வாசிக்கவும்.

1. சிவஞானசித்தி திறவுகோல் பண்டிதர் மு. கந்தையா
2. சித்தாந்தச் செழும்புதையல் பண்டிதர் மு. கந்தையா
3. சைவசித்தாந்தத் தெளிவு கலாநிதி நா. ஞானகுமாரன்
4. நயந்தரும் சைவசித்தாந்தம் கலாநிதி நா. ஞானகுமாரன்
5. வேத பாரம்பரியமும் சைவசித்தாந்தமும் திருமதி கலைவாணி இராமநாதன்

எனினும் உங்களை அண்டியுள்ள சைவசித்தாந்த அறிஞ்ஞர்களிடம் அறிவு பெறுங்கள் என்றார். அவர் ஆற்றுப் படுத்தலின் படி தேடிக்கண்ட குரு.

குமாரசுவாமி சோமசுந்தரம்

## விஸ்வநாதர் சங்கரப்பிள்ளை



சைவப் பெரியார் விசுவநாதர் சங்கரப்பிள்ளை அவர்கள் தெல்லிப்பழை பன்னாலையைப் பிறப்பிடமாகக் கொண்டவர் சைவாசாரசீலர், சைவசித்தாந்த அறிஞர், ஆசிரியர் இவரது தந்தையார் விச்சுப்பரிகாரியார் என்ற புனை பெயர் பூண்ட பிரபல சித்தவைத்தியர் தாய்பெயர் இளையபிள்ளை.

விழிசிட்டி வாசகரும், பண்டிதரும் ஆகிய காலஞ்சென்ற சைவப்பெரியார் உயர்திரு. சி.கதிரிப்பிள்ளை ஆரிரியரிடம் இலக்கிய இலக்கணங்கள் முறையாகக் கற்று விளங்கியவர். பன்னாலை சேர் கனகசபை வித்தியாலயத்தில் ஆசிரியராகவும் உப அதிபராகவும் பணிபுரிந்தவர்.

சைவசித்தாந்த பேரறிஞரும் அநுபூதி மானுமாகிய உயர்திரு. அருளானந்தசிவம் (ஏழாலையூர் சித்தவைத்தியர் ஐ. பொன்னையா) அவர்களிடம் சைவ சித்தாந்த உபதேசம் பெற்று அறிஞராயும் சாதனைகளோடு கூடியவராயும் விளங்கினார்.

கீரிமலை சிவநெறிக்கழக சைவசித்தாந்த ஆசிரியராக சைவசித்தாந்த வகுப்பு நடத்தியுள்ளார். யாழ்ப்பாண நிலையினை அறிந்து வகுப்புகள் நடத்த முடியாமையாக இடம்பெயர்ந்து தற்பொழுது கொழும்பில் வசித்துவருகிறார்.

*"பண்டைமறை வண்டரற்ற சைவத்தின் பசுந்தேன் பரிந்தொழுழும்*
*புண்டரிகம் பொலிந்து தோன்று பன்னாலைப் பதிதனில்*
*அண்டறிந்த ஆயுள்வேத ஆசானாம் விஸ்வநாதர் இளையபிள்ளை*
*கண்டறிந்து தோற்றுவித்த சங்கரப் பிள்ளைசைவ சித்தாந்தரே"*



இதனை,

*தென்றல் வந்துலவு தெல்லிப் பழையின்*
*முன்றிலாம் பன்னாலை எனும்பழம் பதியில்*
*விச்சுப் பரிகாரி புனைபெயர் பூண்ட*
*விஸ்வ நாதர் இளைய பிளையை*
*சூரியன் சந்திரன் சூழ்ந்து நிற்க*
*அக்னி சாட்சியாய் அணைத்தார் என்ன*
*இல்லறம் நல்லதமாக இனிது நடாத்தி*
*சங்கரன் அருளால் சங்கரப் பிள்ளை*
*பூமியில் வந்து பொருந்திய பின்னர்*
*கலைபயில் தெளிவு கட்டுரை வண்மை*
*கதிரிப் பிளையை ஆசானாக அணைத்து*
*இலக்கணம் இலக்கியம் இதிகாசம் இனிது*
*கற்றது மன்றி கற்பித்து பன்னாலை*
*கனகசபை வித்தியா லயத்தில் அதிபராய்*
*கடமை ஆற்றிய காலை அநுபூதி*
*மான்களாய திருஅருளா நந்த சிவம்*
*சித்த வைத்தியர் பொன்னையா ஒத்த*
*சித்தாந்த அறிஞரை சிவமாய்க் கொண்டு*
*உபதேசம் பெற்று உயர்ந்து வந்த*
*கீரிமலை பதியில் சிறியோர் உரியோர்*
*பெரியோருக்கு சித்தாந்த வகுப்பு நடாத்தி*
*ஆன்றோரின் ஆசியும் அணைவும் பெற்ற*
*நாளில் இராணுவத்தின் இருளில் வருந்தி*
*கொழும்பில் வந்து குடிகொண்ட பெரியோர்*
*நும்பணி விண்பணியாய் வளர்க !*
*என்னை யாண்ட இறையே வாழ்கவே !!*

இவ்வாறு இயம்புகிறேன்.

# இறை இலக்கணம்

உருவும், ஊரும், பேரும் இல்லா இறைவன் ஆன்மாக்களின் பொருட்டு மேற்கொண்ட பெருங்கருணையினால் அவற்றை ஆட்கொள்ளும் முகமாக அவ்வப்போது சங்கற்ப மாத்திரையில் பற்பல மூர்த்தங்களைக் கொண்டு மூர்த்திகளாக விளங்கி ஆன்மாக்களுக்கு அருள் செய்கிறார். அம்மூர்த்தியின் உருவ அமைப்புகளையும் தத்துவங்களையும் எப்படி என்று உணர்வோம்.

ஒவ்வொரு மனித ஜீவராசிகளுக்கும் தத்தமது வாழ்வின் நோக்கினையும் போக்கினையும் உணர்ந்துஉயர்வடைவதற்கு சமயங்கள் ஒவ்வொன்றும் பொதுவில் வழிகாட்டுகின்றன. இவ்வகையில் சிவனை முழுமுதற் கடவுளராக ஏற்று நிற்கும். சைவசித்தாந்தமும் நயக்கத் தகுந்த வகையில் வழிகாட்டி நிற்பது காணுதற்குரியதாகும்.

சைவசித்தாந்த அறிவு விளக்கத்தின் பெறுமானம் எவ்வளவென்பதைச் சிந்திக்கவேண்டும். இது ஒவ்வொருவருக்கும் உரியதாகும். அம்மை நல் வாழ்வுக்கு மட்டுமல்ல இம்மை நல்வாழ்வுக்கும் உறுதுணையாய் நிற்கவல்லது அறிவு விளக்கமேயாம். வாழ்வியல் உண்மையை உணர்ந்து தன்னுணர்வுக்கு மாறுபடாமல் வாழக் கூடியவன் சைவசித்தாந்த விளக்கமுள்ள ஒருவன் மட்டுமே என்றால் மிகையாகாது. இவ்விளக்கத்தை தலை கொள்ளாவிடத்து உண்மையை உரைக்கும் ஒருவனைக் காண்பதரிது. ஜீவ இரக்கம், சகிப்புத்தன்மை இவைகள் உள்ளவர்களைக் காண்பதும் அரிதாகும். சைசித்தாந்த விளக்கம் குன்றுமிடத்து நம் சைவசமயவாதீனங்கள், சைவ ஆலயங்கள் அனைத்தும் வெறுஞ் சம்பிரதாயச் சடங்கு நிலையங்களாகி விடும். இவற்றை உயிர் இல்லாத உடல்போலப் பார்க்கலாம். சைவ சித்தாந்தம் உயிர் வாழ்க்கையின் இரகசியத்தையும் உணர்வு வீக்கத்தையும் உணர்ந்து கொள்ள உதவுவதாகும். தம் வாழ்வில் ஒருவர் உயர்ந்த விழுமியங்களைக் கடைப்பிடித்து தம் வாழ்வையும் பிறர்வாழ்வையும் நன்னெறியிற் செலுத்தும் விருப்பத்தைப் பெறுவதற்கு உதவுவதாகும். இத்தகைய விளக்கம் பொதுவில் எல்லார்க்கும் இலகுவாக அமையாது. தமிழர் பாரம்பரியத்தில் இவ்வாறான விளக்கத்தை உணர்த்திக் கொண்டிருக்கும் விசேடகலை சைவசித்தாந்தக் கலையே, சமய சமூக வாழ்வியல் ரீதியாகத் தமிழரிடத்தே இக்கலை விளங்கி வருகிறது. இதைத்தவற விடாமல் பாரம்பரியமாகக் கைக்கொண்டு நடந்து வருவது நம்கடமையாகும். இறை இலக்கணம் என்றும் வளர்ந்து வரும் நாகரீக வாழ்வுக்கு ஓர் அங்கத்தவராய் ஆக்குவதற்கு உதவுவதாகும்.



இந்த இறையின் இலக்கணத்தை எவ்வகை எந்த நூல்கள் நம்போன்றவர்களுக்கு எடுத்து இயம்பியுள்ளன. இவை காட்டும் வழிதான் என்ன என்பதைச் சற்று சிந்திக்க வேண்டும்.

தொன்மைத் தென்னாட்டுச் செந்தமிழின் நன்மைத் திருநெறி சிவநெறியாகும். அந்நெறிக்குரிய மறைநூல்கள் திருமுறைகள் எனப்படும். திருமுறைகள் செந்தமிழின் உயிரெழுத்தொப்பப் பன்னிரண்டு. இப்பன்னிரண்டுகளுள் திருமூல நாயனார் அருளிய திருமந்திரம், பத்தாந் திருமுறையாகும். அப்பத்தாந் திருமுறை முத்திற வாழ்க்கையின் இலக்கணங்களைச் செம்மைபெற எடுத்தோதுந் சீரிய அருள் நூல். அந்நூல் ஒன்பது தந்திரங்களையுடையது. அவற்றுள் முன் நான்கு தந்திரங்களும் அறம், பொருள், இன்பம், வீடு என்று நான்கையும் குறிப்பனவாகும். பின்னுள்ள ஐந்தும் திருக்கோயிலமைப்பு நெறிமுறைகள் வழிபடுமியல்புகளை பெறற்கரும் பேறுகளை குறிப்பன. செந்தமிழ்த் திருமந்திர நூலொன்றே தனித்தமிழ் மறைநூலும் முறைநூலும் ஆகும். மறை–வேதம், முறை–ஆகமம், முத்திற வாழ்க்கை, இம்மை வாழ்க்கை, உம்மை வாழ்க்கை, அம்மை வாழ்க்கை எனப்படும்.

மேலும் மறை நூலை உலகியலென்றும், முறை நூலைக் கடவுள் இயல் என்றும் கட்டுரைப்பர். திருமந்திர நூலிற்காணும் முதல் நான்கு தந்திரங்களிலும் ஓதப்பெறும் நான்மறையின் விரிவே திருவள்ளுவ நாயனாரருளிய செந்தமிழ்ப் பொதுமறையாகும். ஏனை ஐந்து தந்திரங்களும் செந்தமிழ் வழிபாட்டின் சீரிய இலக்கணமாகும்; திருமந்திர நீங்கலாகிய ஏனைய திருமுறைகள் பதினொன்றும் சிவவழிபாட்டு தோத்திரங்களாகும். எனவே திருமந்திரம் வழிபாட்டு நூல் அல்ல, வழிபாட்டின் மாண்புகளை ஏனைய நூல்கள் எடுத்துக் கூறுகின்றன. வழிபாட்டு இலக்கணத்தை பொருள் நூல் என்றும், வழிபாட்டினர் மாண்புகளை புகழ் நூல் எனறும் கூறுவர். இதுவே சாஸ்திர தோத்திரங்களாகும்.

அனுபவ வாயிலாக எடுத்துக் கூறியுமுள்ளார்கள். இவர்களில் நக்கீரரும் ஒருவர் ஆவர். இவர் இலக்கிய வாயிலாக சிவனிடையே நடந்த சொற்போரில் திருப்புமுனையாக எடுத்தாண்ட நூல்களே திருமுருகாற்றுப்படை, கயிலைபாதிகாளத்திபாதி போற்றிக் கலிவெண்பா முதலியனவாகும். நற்கீரர், அடியவரை இறைவனிடம் வழிபடுத்தும் வகையில் திருமுருகாற்றுப்படை என்னும் இலக்கியத்தால் நெறிப்படுத்தினார். இவ்வளவு அனுபவங்களுக்குப் பின் நற்கீரர் எடுத்தியம்பிய இறைத்துவம்.

திருமுருகாற்றுப்படை :-

*"ஆய்ந்து கொள்வார்க்கு அரன் அங்கு வெளிப்படும்*
*தோய்ந்து நெருப்பது தூமணி சிந்திடும்"*
*"சொற்பொருளைச் சார்பின்றிச் சோதித்து உணர்த்துவதே*
*நற்பொருள் காட்டும் நயம்"*

கயிலைபாதி காளத்திபாதியந்தாதி என்பதை சற்று ஆராய்ந்தால் சொரூப நிலையில் உள்ள பரம் பொருளுக்கு அமைந்த ஆண்,பெண் உருவம் வாழ்க்கைக்கு வழிகாட்டுகிறது என்ற தத்துவமாகும். இறைவனை "அவிரொளி, வடிவினன் என நக்கீரர் எடுத்து இயம்பியிருக்கிறார்.

நக்கீரனாருக்குப்பின் வாழ்ந்தவரான காரைக்கால் அம்மையார் பெற்றிருந்த இறையனுபவங்களும் இத்தகையதே. இவர் இறைவனின் சொரூபவடிவினை.

*"அன்றுந் திருவுருக் காணாதே ஆட்பட்டேன்*
*இன்றுந் திருவுருவங் காண்கிலேன் – என்றுந்தான்*
*எவ்வுருவோன் நும்பிரான் என்பார்கட் கென்றுரைக்கேன்*
*எவ்வுருவோ நின்னுருவம் ஏது."*

(அற்புதத்திருவந்தாதி)

என வினவுகிறார்.

இவ்வாறே மாணிக்கவாசகர் முதலான சிவநேசச் செல்வர்களின் அனுபவங்களும்.

*"போக்குவாய் என்னைப் புகுவிப்பாய் நின்றொழும்பின்*
*நாற்றத்தின் நேரியாய் சேயாய் நணியானே*
*மாற்றம் மனம்கழிய நின்ற மறையோனே ....(45)*

சிவபுராணம்

*"உண்டோ ஒண்பொருள் எண்ணுவார்க்கெலாம்*
*பெண்டிர் ஆண் அலி என்றறி யொண்கிலை*
*தொண்ட னேற்குள்ள வாவந்து தோற்றினாய்*
*கண்டுங் கண்டிலேன் என்னகண் மாயமே"*

இவ்வாறு கூறுகின்றது திருச்சதகம்.



*விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய் விளங்கொளியாய்*
*எண்ணிறந் தெல்லை இலாதானே நின் பெருஞ்சீர்*
*பொல்லா வினையேன் புகழுமா றொன்றறியேன் ..(25 வரி) சிவபுராணம்.*

இந்நிலை சம்பந்தர் கண்ணுக்கும் புலப்பட்டது.

*"இன்னவுரு வின்னநிற, மென்றறிவதே யரிது. நீதிபலவும்*
*தன்னவுரு வாமெனமி குத்தவ னீதியொடு தானமர் விடம்*
*முன்னைவினை போய் வகையினான் முழுதுணர்ந்து முயல்கின்றமுனிவர்*
*மன்ன ரிரு போதுமரு வித்தொழுது சேரும் வயல் வைகாவிலே"*

*(329ம் பதிகம் – 4ம்பா)*

இன்நிலையே நாவுக்கரசருக்கும்

*"மைப்படிந்த கண்ணாளுந் தானுங் கச்சி*
*மயானந்தான் வார்சடையானென்னி னல்லான்*
*ஒப்புடைய னல்ல னொருவ னல்லன்*
*ஒரூர னல்லனோ ருவம னில்லி*
*அப்படியு மந்நிறமு மவ்வண் ணமு*
*மவனருளே கண்ணாகக் காணினல்லால்*
*இப்படிய னின் நிறத்தனிவ்வண் ணத்த*
*னிவனிறைவ னென் றெழுதிக் காட்டொணாதே."*

*(பதிகம் 311 பா 10)*

என்று இயம்புகின்றார்.

இன்னும் கச்சியப்ப சிவாசாரியாரும்,

*"ஞானத் தானுரு வாகிய நாயகனியல்பை*
*யானும் நீயும் இசைந்து மென் றாலஃ தெளிதோ*
*மோனந் தீர்கலா முனிவருந் தேற்றிலர் முழுதுங்*
*தானும் காண்கிலன் இன்னமுந் தன்பெருந் தலைமை"* என்றார்

(கந்தபுராணம் 128)

என அளத்தற்கரியது இறைத்தத்துவம் என்பர். அதனாலே தான் வடமொழி வேதங்களிலும், திருக்குறள், தொல்காப்பியம் முதலான தமிழ் இலக்கண இலக்கியங்களிலும் இறைதத்துவம் மறைபொருளாக உணர்த்தப்பட்டது என்பது புலனாம்.

இறைவன் சிறப்பு இயல்புகளை வேதங்கள் தேடித் துருவிக் கொண்டிருந்ததை மாணிக்கவாசக சுவாமிகள் அப்பெருமறை தேடிய அரும்பொருள். மறைஈறு அறியா மறையோனே, "வேதங்கள் ஐயாவென வோங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே". என்று பல சொல்லடுக்குகளால் சுட்டிக் காட்டியுள்ளார்.

வேதங்கள் நால்வகை அறங்களைக் கூறி இல்லறத்தைப் பேணும் சகலருக்கு வழிகாட்டியுள்ளன. இதனாலே இவைகளைப் பொதுநூல்கள் என்று கூறியுள்ளார்கள். தேவார அணிகளை இறை புகழ் நூலென்றும் மற்றையவற்றைப் பொருள் நூல் என்றும் ஒருவாறு வகுத்து கூறியுள்ளார்கள்.

ஏன் தொல்காப்பியரும்,

*"வினையின் நீங்கிய விளங்கிய அறிவின்*
*முனைவன் கண்டது முதல் நூல் ஆகும்"* எனக் கூறினார். (தொல்649)

முனைவன் என்பது முன்னோன் ஆகிய சிவனே. காலத்தால் அடுத்துவரும் பௌத்த நூலாகிய மணிமேகலையும், 'கணக்கர் தந்திறங்கேட்ட காதையில் வஞ்சிமா நகர்புறத்துச் சமயக்கணக்கர் தந்திறங்கேட்டபோது,

*"காண்டற் பொருளாற் கண்டிலதுணர்தல்*
*உவ மான தொப்புவமை யளவை*
*கவய மாப் போலுமெனக் கருதல்*
*ஆகம வளவையறிவ னூலாற்*
*போக புவன முண்டெனப் புலங்கொளல்.*
*அருத்தா பத்தி யாய்க்குடி கங்கை."*
*இருக்கு மென்றாற் கரையிவென் றெண்ணால்*
*இயல்பியானை மேலிருந்தோன் றேட்டிக்*
*கயவொன்றீயா ததுவே கொடுத்தல்*
*ஐதிக மென்ப துலகுரை யிம்மாத்*
*தெய்திய தோர் பேயுண்டெனத் தெளிதல்*
*அபாவ மென்ப தின்மையோர் பொருளைத்*
*தவாத்துவிடத்துத் தாளிலை யென்றால்*

மணிமேகலை 40வது வரித் தொடர்



என்னும் வரிகளில் கடவுளின் இயல்பை திட்டவட்டமாக இயம்புதல் இலகுவல்ல என்பதை விளக்கி இருப்பதைக் காண்க. "கவயமா என்பது ஒருவகை மிருகம் காட்டுப் பசு. இதை பசுவை ஒருவகையாய் ஒக்கு மெனஉரு உவமவளவை" யால் அளக்கிறார். ஆகம வளவை – அறிவனூல். இதனை புலங்கொளல் – அறிதல், இதனை சாத்தமென்றும் உரையளவையென்றும் கூறுவர். அருத்தாபத்தி அளவை இது பொருளளவை என்பர்.

கடவுளின் இயல்பை திட்டவட்டமாய் இயம்புதல் இலகுவல்ல என்பதை இதற்கு முன் கூறியவற்றால் உணர்ந்தோம். எனினும் வேண்டியளவு ஆராய்ந்து புல்லறிவுக்கேற்ற புத்தியை புகுத்திப் பார்ப்போம்.

இறைவன் தாங்குவோனாகியும் தாங்கப்படுவோனாகியும் தன் தண்ணளியால் முறையே இரு நிலைக்கண்ணும் இருவகையானவன விடைஏறும் அடையாளம் ஆருயிரின் சிறப்பு நிலையினைக் குறிக்கும். இந் நிலையில் இறைவன் தாங்கப்படுவோனாகிறான். இதுவே சிவபெருமான் அம்மை அப்பனாய் ஆனேற்றின் மீது வீற்றிருந் தருள்கின்றனன் என்னும் உருவக உள்ளுறை உண்மையாகும். இறைவன் தாங்கப்படுவோனாகிய காலத்து ஆருயிர் தாங்குவதாகும் தாங்குங்கால் அவ்வுயிர் சிவாகமம் பெருவாழ்வினை தாங்கும் வண்ணஞ்செய்து தனக்கு அடிமையாகவும் "மீளா அடிமை" ஏனோர்க்கு தாங்குதலாகும். ("ஏனோர்க்குக் தங்கோனை பாடேபோரெம்பாவாய்" மணிவாசகனார் திருவெண்பாப் பகுதி.) இம் முறை மேலதற்கு ஒப்பாகும். சிவபெருமான் ஆருயிர்களைத் தாங்கும் வண்ணம் செய்தற் பொருட்டே விடை ஏறுகின்றனன் என்னும் உண்மை வரும். இதை தேவாரத் திருமா மறையாயுணரலாம்.

*"ஏறேற்ற மாவேறி எண்கணமும் பின்படர*
*மாறேற்றார் வல்லரணஞ் சீறி மயானத்தில்*
*நீறேற்ற மேனியரும் நீள்சடைமேல் நீர்ததும்ப*
*ஆனேற்ற அந்தணனை நான் கண்ட தாரூரே* **–4–19–4.**

தூய வெண்மதி சூடி இருப்பவன், தூய வெள்ளிய வளர் மதியைச் சூடியருளி என்பது உயிர்களைப் பிறையொடு பொருத்தியருளியதன் உருவகமாகும். திருமுடி என்பது சிவபெருமானின் திருவருட் பெருவெளியாகும். மதிக்குத் தூய்மை புல்லு மலநீக்கத்தின் பொருட்டுப் பிறப்பின்கண் திருவருளால் வருதல், கல்லூரியில் கற்றற் பொருட்டு ஒருவர் நல்லாசானால் சேர்த்துக் கொள்ளப்படின் அவன் மாணவன் என்றே

அழைக்கப்படுவான். கற்றுத் தேறியவனை மாணவர் என்றே அழைக்கப்படுவர். இவர்களின் வேறுபாடுகள் அவர்கட்குக் கொடுக்கப்படும் அடைமொழிகள் விளக்கும். உதாரணமாக தலைமை ஆசிரியர் விரிவுரையாளர் பேராசிரியர் போன்றன.

இம்முறையில் சிவபெருமான் தலைமேல் விளங்கும் அடையாளமாகிய பிறையும் "தூவெண்மதி" என்று விளக்கப்படுவதாகும்.

ஆருயிர்களை இறைவன் இயைக்சிய-சத்தி அறிவிக்க அறியும் இயல்பினன். இஃது ஆசான் மாணவரோடியைந்து கற்பிக்க கற்கும் மாணவர் இயல்பினோடொக்கும் கற்பிக்கும் ஆசானின் அறிவுப் பங்கு மாணவனுக்கு ஏறுவது போல ஆண்டவனின் அறிவுப் பங்கும் ஆருயிர்க்கு வரும். இதனை திருமாமறை

*"பங்கேறு மதிசேர்சடையார் விடையார் பலவேதம்*
*அங்கமாறு மறைநான் கவையும் ஆருர் பலவேதம்*
*வங்கமேற கடல்வாழ் பரதர் மனைக்கே நுளைமூக்கின்*
*சங்கம்ஏறி, முத்தமீனுஞ் சண்பை நகராரே – 1 – 66 – 1.*

எனக் கூறுகிறது.

வெண்மை பளிங்கொத்த ஆருயிரின் பண்பினைக் குறிக்கும்.

இவ்வுண்மையை தாயுமான சுவாமி பின்னர் உணர்த்துகிறார்.

*"வந்தேனுடல் பொருனாவி மூன்றுந் தன்கை வசமெனவே அத்துவாமர்க்க நோக்கி ஐந்துபுலன் ஐம்பூதங் கரணமாதி அடுத்தகுணம் அத்தனையும் அல்லை அல்லை இந்தவுடல் அறிவறிய, மையுநீயல்லை யாதொன்று பற்றினைதன் இயல்பாய்நின்று பந்தமறும் பளிங்கனைய சிந்துநீர்பக்குவங்கண்டறிவிக்கும் பான்மையேயாம்.*

நன்கு ஆய்ந்து போவோமானால், இறைவன் ஆன்மாக்களை ஆட்கொள்வதற்கு உயிர்களைத் தன் வசப்படுத்தி மானுடச் சட்டை தாங்கி வருகின்றான்.

வேட்டுவர் அந்தந்த இனத்தில் பழக்கப்பட்ட விலங்குகளைக் காட்டி ஏனைய வன விலங்குகளை வசப்படுத்திப் பிடிப்பர். இறைவனும் மானுடச் சட்டை போர்த்திக் கொண்டுவருவார். இப் பூவுலகத்தோர் இதை இலகுவில் அறியார்.



திருவாதவூரடிகளை ஆட்கொள்ளும் பொருட்டு திருப்பெருந்துறையில் குருந்த மர நிழலில் இருந்த முறையும் இதுவே

*"போர்வை எனக்காணார் பதி பார்வை என*
*மாக்களை முன் பற்றிப் பிடித்தற்கு"*

*திருவருட்பயன் 45ம் செய்யுள்.*

இவ்விடத்திலே, சகலாவாரைத் தடுத்தாட்கொள்வதற்கே திருவருள் மானிடத்திருக் கோலம் தாங்கி வருகிறார்.

*"உருத்திரநற் திருமணியை யிலங்குகாதி*
*லொண் சிரத்திற் கந்தரத்தி லொளி கொண்மார் பிற்*
*கரத்திலணிந் திலகு திரு முண்டமங்கிக்*
*கண்கரந்த நண்றுதன்மேற் கவிதை சாத்திற்*
*திருத்திகழும் வேதியனா ரம்பொன்மேனி*
*திகழ்வதுகண் டகமகிழ்வார் செங்கை மீது*
*பொருத்த முறும் புத்தகமே தையா வென்னப்*
*பொய்மையிலாச் சிவஞான போதமென்றார்"*

*திருப்பெருந்துறைச் சருக்கம் 35ம் பா.*

மானுடச் சட்டையோடு வந்ததை விளக்குபவர் ஞான தேசிகருடைய அணியையும் கூறுகிறார்.

நல்ல உருத்திராக்க மணியை, விளங்கா நிற்கும் திருக் கரங்களிலும் அழகிய சிரசினும், திருக்கழுந்திலும் ஒளிபொருந்திய மார்பிலும், திருக்கரங்களிலும் தரித்தும், வெள்ளொளி விளக்குங் திரிபுண்டரத்தை அக்கினிக் கண்ணை மறைத்த நல்ல திரு நெற்றியிலே சிவாகமவிதிவிளங்கத் தரித்தும் குருலக்ஷணம் விளங்கும் அநாதி சைவராகிய சிவபெருமானது மாற்றுயர்ந்த பொன் போலும் ஞான தேசிகத் திருமேனி போரொளி செய்வதைத் தரித்து மேலும் மனம் களிகூரும் திருவாதவூரடிகள் அவரை நோக்கி சுவாமி உமது சிவந்த திருக்கரத்திற் பொருந்தும் திருமுறையானெதவினவ" அதற்கு அவர் இது மெய்மையாகிய சிவஞான போத மென்று கூறினார். வேடர் தம் வினையான் மகிழ்வெய்தற்கு விரும்பிய மிருகத்தை ஒத்துநடக்கவைத்து, மற்றவற்றைப் பிடிப்பர் அதுபோல ஞானசாரிய வேடங்கொண்டே திருவாதவூரடிகளை அடிமையாகக்க வேண்டுமென்று இவ்வாறு வேடங்கொண்டார் என்பதைக் கடவுள் மாமுனிவர் விளக்கியுள்ளார்.

இன்னும் பலவாறு நம்சிவனை நினைந்து ஆட்கொள்ளும் பலப்பல வடிவங்களை எடுத்துக்காட்டலாம். விடயம் விரிந்து நீண்டு வடமாகும்.

இவ்வாறாய சிவன் மனுவடிவம் தாங்கி வந்து அடிமையாய்த் திருவாதவூரரை ஆட் கொண்டாரே ஆனால் திருமாலும் திசைமுகனும் ஏன் இன்றும் காணவில்லை என மாணவ நேயர்கள் கடாவக்கூடும்.

*"அலரவனும் மாலவனும் அறியாமே அழலுருவாய்*
*நிலமுதற்கீழ் அண்டமுற நின்றதுதான் என்னேடீ*
*நில முதற்கீழ் அண்டமுற நின்றிலனேல் இருவரும்தம்*
*சில முகத்தால் ஆங்காரம் தவிரார் காண் சாழலோ*

*திருச்சாளர் 6வதுபா*
**மணிவாசகர்**

**இன்னும்** அப்பரடிகள் அருளிய திருக்குறுந் தொகைக் **கண்ணும்** இவ்வுண்மை காண்க

*"செங்கணானும் பிரமனுந் தம்முள்ளே*
*எங்குந்தேடி திரிந்தவர் காண்கிலார்*
*இங்குற் றேனென் நிலிங்கந்தே தோன்றினார்*
*பொங்கு செஞ்சடைப் புண்ணிய மூர்த்தியே"*

*இலிங்க புராணத்திருக் குறுந்தொகை* ***11ம் பா***

இதுவே முடிந்தமுடிபாகும் கடாவின் விடையுமாகும்

சிவபெருமான் முத்தொழிலின் பொருட்டுக் கொள்ளும் முவ்வடிவங்களை திருமாமறை பின்வருமாறு கூறுகிறது.

*"சிவனாகித் திசைமுகனாய்த் திருமா லாகிச்*
*செழுஞ்சுடராய்த் தீயாகி நீருமாகிப்*
*புவனமா கிப் புவனங்கள் அனைத்து மாகிப்*
*பொன்னாகி மணியாகி முத்துமாகிப்*
*பவனாகிப் பவனங்கள் அனைத்து மாகிப்*
*பசு வேறித் திரிவானோர் பவனாய் நின்ற*
*தவனாய தலையாலங் காடன்தன்னைச்*
*சாராதே சானாட் போக்கினேனே,* ***6,2,9–4***



பின் நாம் திருவுந்தியாரின் கருத்தினைப் பார்ப்போம்.

(I) தீபற :– என்பதற்கு : உம்முடைய (தீ) அருதி குற்றத்தை விளைவிக்கிற மும்மலங்களையும் கருவிகாரணாதிகளையும் தேகாதிப் பிரபஞ்சங்களையும் (பற) விட்டுப் போம்படியிந்த ஞானசாஸ்திரத்தின் கருத்தே கருத்தாக நிற்பீரெனக் கொள்க.

*"அகளமா யாரு மறிவரி தம்பொருள்*
*சகனமாய் வந்ததென் நுந் தீபற*
*தானாகத தந்த தென் நுந் தீபற"*

அநாதியே நிர்மலமாய்த் தன்னைக் கூடினவர்களாலுங் கூடாதவர்**களாலும்** அறிதற்கரிய பரிபூரணமான வந்தப் பெரும் பேரருள் நம்பொருட்டால் ஒரு திருமேனி கொண்டெழுந் தருளிவந்து இப்படி எழுந்தருளிவந்த அந்தப் பொருள் தீட்சையிலே சஞ்சிதத்தையு மொழித்துப் பிராரத்தம் புசிக்கச் செய்து அதிலழுந்தாத படியும் காட்டி ஆகாமியம் ஏறிடாதபடி நிலையிலே நிறுத்தி மாயா படலத்தையு முரித்து மூலமலமாகிய நிகளத்தையும் விடுவித்து அருளாகிய அமிர்தத்தை புசிப்பித்து தன்னுடைய திருவடியிலே கூட்டி வேறற நிற்கத் தந்தது.

நிகளம் = விலங்கு

(II) தன்னுடைய சிவ சொரூபத்து உண்மையும் இந்த சிவரூபம் கண்ணாகவேயறிந்து இந்தச் சிவரூபத்துடனே வேற்று நின்றறுபவிக்கத்தக்க ஐக்கியம் உண்டானபோது அதனால் விளைந்த பரம சுகத்தை வாக்கால் உரைக்கும் அளவில் அனுபோகமானது உரைக்கப்படாதாகையால் மன வாக்கு காயங்கள் மாயா விகற்பமாகையினாலே இவற்றிற்கு அதீதமாயிருக்கையாலும் இப்பொருட்டே ஒப்பிலா தொழிகையாலும் இப்படி இருந்ததென்று எப்படி உவமித்துச் சொல்லுவேன். ஒருவனுக்கு கன் மந்துலையொத்து மலபரிபாகமும் பிறந்து தேசிகனுடைய திருவடியைப் பெற்றுச் சிவசொரூபத்தையுமுணர்ந்து இரண்டறக் கூடிப் பரமானந்தமும் விளைந்து அந்தப் பரம சுகத்திலே அழுந்தின காலத்தவனுக்கு எப்படி இருந்ததோ அப்படியேயா யென்னுமதொழிந்து இன்னபடி யென்றளவுபடுத்தி யுரைக்கு வதல்ல வாதலாலப்படி யேயிருந்து அப்படியே இருந்த இப்பொருளான் ஆன்ம ஞானத்தாலறிந்து கூடத்தக்க பொருளல்ல என்று பொருள்பட

*"எங்ஙனிருந்த தென் றெவ்வண்ணஞ் சொல்லுகே*
*ணங்ஙனிருந்த தென்னுந் தீபற*
*அறியு மறிவதன்றுந் தீபற"* **கூறினார்.**

(III) இன்னும் பஞ்சபூதமும் சந்திராதித்தரு மான்மாக்களுமாக எட்டு வகையும் திருமேனியாக வெழுந்தருளி நின்ற தம்பிரான் அனாதியே தன்னை விட்டு நீங்காது நின்ற முறைமையை அவருடைய திருவருளினாலே யறிந்து தானுமவரைப் போலே சினேகிதம் புரிந்து கூடினவர்கள் பராரத்தம் துலையுமாறும் தேகவிசுவங்களிலே நின்றாரேயாயினும் (சாக்காளி என்னும் புழுப் போல) கருத்து வேறே பூண்டு கிடைக்கையாலே விசுவத்திற் படார்கள். இப்படி விசுவத்தை அருட்கண்ணாலே பொய்யான படிகண்டு நீங்கி நிற்கவே ஒரு காலத்திலுமழிவில்லே பொய்யான படி கண்டு நீங்கி நிற்கவே ஒரு காலத்திலு மழிவில்லாத திருப்பாதமே அவர்களுக்குப் புகலிடமாம்.

இப்பொருள் உணர்த்தும்பா

*"எட்டுக் கொண்டார் தமைத்தொட்டு கொண்டே*
*விட்டாருலக மென்றுந் தீபற*
*வீடேவீடாகு மென்றுந் தீபற" என்பதாம்.*

இறையையடைய நாட்போக்கிய ஆன்மா பல பிறவிகளிற் செய்துவந்த சிவ புண்ணிய பயன் இப்பிறவியைப் பக்குவ வழியிற்படுத்தலுறும். இது காறும் உள்ளே இருந்து உணர்த்தி வந்த முழு முதற்பொருள் ஆசாரியராய் அருள் வடிவமுங் கொண்டு எழுந்தருளித் தீக்கை செய்து மெய்யுணர்வினை அறிவுறுத்தும், அப்போது ஐம்பொறி வழியே உழன்ற அல்லல் தெரியவரும். பின்பு ஆன்மா இறைவனோடு கூடும் நெறி நின்று முதல்வன் திருவடிவாய் பேறு பெறும், சரியை, கிரியை, யோக மார்க்கங்களை பரம் பொருள் ஆன்மாவுக்கு உண்ணின்று உணர்த்தி வரும். ஞானமார்க்கத்தை அனுக்கிரகிக்கும் போது குருவடிவங் கொள்ளும்.

இதனை சாதனவியில் எட்டாஞ்சூத்திரம் விளக்கும் சிவஞானபோதம்.

*"ஐம்புல வேடரி னயர்ந்தனை வளர்ந்தெனத்*
*தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்ந்தவிட்*
*டன்னிய மின்மையினரன் கழல் செலுமே"*

*சிவஞானபோதம் எட்டாம் சூத்திரம் 226ம் பக்கம்*

இச் சூத்திரத்தின் விரிவை நம்மாற் கூறமுடியாது எனினும் முதல்வனை மன்னனாகவும் ஆன்மாவை மன்னவ குமாரனாகவும் ஐம்பொறிகளை வேடராகவும் உருவகஞ் செய்கிறார். இறைனையடைவதற்கு வழியாகிய தனுகரண புவன பேகங்களில் உயிர் செல்லுங்கால் ஐம்பொறிகளாகிய வேடர் அவ்வுயிர் அடைதற்குரிய அறிவுப் பெருஞ் செல்வமுழுவதையும் வழிப்பறி செய்து கொண்டு அவ்வுயிரைச்



சிரமப்படுத்துதலையும் விதிவிலக்கைக் கடந்து இழிந்த செயல்களில் பிரவேசிக்கும்படி செய்தலும் ஆகிய இயல்பு பற்றி ஐம்பொறிகளை வேடராகவும் உருவகஞ் செய்தார்.

அன்னியமின்மை என்பது பிரிக்க முடியாத அத்துவிதம் அதாவது ஐம்பொறிகளை விட்டவிடத்து அரன் திருவடிகளை அடைவதற்கு ஏதுவாய் நின்ற பிரிக்க முடியாத சம்பந்த விசேடம். திருவடியோடு உயிர் என்று பிரிப்பின்றி நிற்றலால் ஐம்பொறிகளை விட்ட இடத்து திருவடியை அடையும்.

இக்கொள்கையை உன்னியே திருமூலநாயனாரும் திருமந்திரம் 9ம் தந்திரம் சூனிய சம்பாஷனையில் எடுத்தாட் கொண்டுள்ளார்.

*பார்ப்பான் அகத்திலே பாற்பசு ஐந்துண்டு*
*மேய்ப்பாருமின்றி வெறித்துத் திரிவன*
*மேய்ப்பாரும் உண்டாய் வெறியும் அடங்கினால்*
*பார்ப்பான் பசுஐந்தும் பாலாச் சொரியுமே*

*திருமந்திரம் 2883*

ஆன்மாவாகிய பார்ப்பானது உடம்பகத்தில் இந்திரியங்களாகிய கறவைப் பசுக்கள் உள்ளன அவை அடக்குவாரின்றி விருப்பம்போல புலன்களை நோக்கிச் செல்வனவாகும் ஆன்மாவைச் செலுத்தும் சிவமாகிய மேய்ப்பார் உண்டாகிப் புலன்களிற் செல்லும் விருப்பத்தையும் விட்டால் ஆன்மாவிடம் பொருந்திய இந்திரியங்களாகிய பசுக்கள் பேரின்பமாகிய பாலினை விளைவிக்கும். ஒருவாறு விளக்கினார் போல இறைவன் உயிர்க்குக் கண்டும் காட்டியும் உதவும் கருணையுடையவர் ஆதலால் தான்

*"தொன்டனேன் நினையுமாநினையே* 11
*தொண்டனே விரும்புமா விரும்பே* 10
*தெண்டனே தொடருமா தொடரே* 9
*தொண்டனே நுகருமாநுகரே"* 7

*கோயில் திருமாளிகைத் தேவர்*

என்று திருவிசைப்பா திருவாய் மலருகின்றது.

*"காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல*
*காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்*
*அயரா அன்பின் அருள் கழல் செலுமே*

என்கிறது சிவஞானபோதம்
8ம் சூத்திரம்

**சீவன் முத்தரும்** அடியவர்களின் திருவேடத்தையும் தாங்கிஆலயத்தில் வாழ்ந்தார்கள், வாழ்வார்கள், வாழ்கிறார்கள்.

இதனைத் திருத் தொண்டர் புராணமும் கூறுகிறது.

"பெருமையால் தம்மை ஒப்பார் பேணலால் எம்மைப் பெற்றார்
ஒருமையால் உவகை வெல்வார் ஊனமேல் ஒன்று மில்லான்
அருமையாம் நிலையில் நின்றார் அன்பினால் இன்பம் ஆவார்
இருமையுங் கடந்து நின்றார் இவரை நீ அடைவாய் "

*196ம் பா*

என்று இறைவனால் அருளைப் பெற்ற அடியார்களைப் போற்றி வாழ்கிறார்கள். இவைகள் பிழை அல்ல கொள்கையாகும்.

பசுக்கள் பேரின்பமாகிய பாலினை விளைக்கும் திருமூலநாயனார் முன்னரே கூறியுள்ளனர்.

நாம் முன்னெடுத்துக் காட்டியது போல நம் சமய குரவர்கள், சிவமே முழுமுதல் என எடுத்துக்காட்டி அவற்றின் பிரதானமான பொருள்களை தேவார, திருவாசக, திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, திருப்புராணம் எனவகுத்தும் புகட்டியும் வந்தார்கள். இவ்வாறு தமிழ் மொழியோடும், தமிழர் மரபுகளோடும் இணைந்து பழங்காலந் தொட்டு வளர்ந்து வந்த சைவசமயக் கருத்துக்கள் பதின்மூன்றாம் நூற்றாண்டு மீண்டும் மறுமலர்ச்சி பெற்று ஓர் உன்னதத் திருப்பத்தைப் பெற்றன. சைவ சமயக் கொள்கைகள் வலிமைபெற்று வளர்ச்சியடையத் தொடங்கிய காலமாகும். அதன் விளைவாகவே சைவ சித்தாந்தம் புத்தொளியும் புது மலர்ச்சியும் பெற்றதெனலாம். அதற்குத் துணைபுரிந்த சைவசமயப் பெரியார்களுள் முதன்மையாகக் குறிப்பிடத்தக்கவர் மெய்கண்டதேவர் என்பவராவர். அவர் இறையருளால் இயற்றிய நூல் சிவஞானபோதம். இதைத் தொடர்ந்தே மற்றைவைகள் வந்தன என்பதை நாம் முன்னர் வரிசைப்படுத்தியுள்ளோம்.

இப்பெரியார் ஆயிரத்து இருநூற்று முப்பத்திநாலாம் (1234)ம் ஆண்டு தென் ஆர்க்காடு மாவட்டத்திலுள்ள திருவெண்ணெய் நல்லூரில் வாழ்ந்த ஒரு சைவ வேளாளர் குலத்தில் பிறந்தவர் என்பதும், அவருடைய இயற்பெயர் சுவேதனப் பெருமாள் என்பதும் சரித்திரம் காட்டியவை. இவற்றைத் தொடர்ந்து வந்தவர்களையும் அவர்களின் கொள்கைகளையும் எடுத்து விரித்துக் காட்டியவர்களும் அவர்களின் வாழ்க்கையில் வந்த இடர்களை இயன்ற அளவு களைந்து ஊக்குவித்தவர்களும் முதன்மையுடையவர்கள். திருவாவடுதுறை



ஆதினத்தவர்கள் என்பது வெள்ளிடைமலை அல்லது உள்ளங்கை நெல்லிக்கனி ஆதீன வித்துவான்களை அண்டியவர்கள், வறியோன் கண்டவான் பொருள் போலவும், மஞ்சுகண்ட மஞ்ஞைபோலவும் மகிழ்ந்தார்கள் என்றால் மிகையாகாது. அவ்வாறு அடியொற்றியவர்களே இப்பெரியார்கள் ஆவர்.

சிவஞானபோதம் முப்பொருள்களான பதி,பசு,பாச உண்மைகளையும் அவற்றின் இலக்கணங்களையும் எடுத்துக்கூறும் பொதுப்பகுதியையும் வீடுபேற்றுக்குரிய ஞான நெறியினையும் அதன் பயனையும் எடுத்துக் கூறும் சிறப்புப் பகுதியையுமுடையது. முழுமுதற் சைவசித்தாந்த நூலாகும். பன்னிரண்டே சூத்திரங்களைக் கொண்ட இந்நூலின் அமைப்பும், அவற்றின் ஆழமான தத்துவக் கருத்துக்களும் ஊன்றிக் கவனிக்கற்பாலன. தமிழ்மொழி இந்நூலினால் புகழும், விரிவும் பெற்றதென்றே கூறலாம். முதலெழுத்தாகிய உயிரெழுத்துத் தொகைகையுடைய பன்னிரு சூத்திரங்கள் கருத்துப் பெற்றிருப்பதுடன் காரணகாரிய உதாரணங்களோடு கூடிய அதிகாரங்களாகவும் அமைந்திருக்கின்றன. உதாரணங்களை விளக்கும் வெண்பா எண்பத்தொன்றாகும். இவை அவையடக்கம் ஒரு வெண்பா காப்பு ஒரு வஞ்சித்துறை, முதல் மூன்று சூத்திரங்கள் பிரமாணவியல், அடுத்தமூன்று இலக்கணவியல், அடுத்தவை சாதாரண இயலைப்பற்றிக் கூறுகின்றன. இறுதி மூன்றும் பயனிலையைப் பற்றியதாகும்.

திருக்களிற்றுப்படியார் மாணவர்களுக்கு இறை இலக்கணத்தை எவ்வாறு விளக்குகிறார்.

*அம்மையப்பரேயுலகுக் கம்மையப்ப ரென்றறிக*
*வம்மையப் பரம்பரிசே வந்தளிப்ப – ரம்மையப்ப*
*ரெல்லாவுலகுக்கு மப்புறத்தாரிப்புறத்து*
*மல்லார் போனிற்பாரவர்*

சங்காரமான காலத்து மலசகிதரான மூன்று வகைப்பட்ட ஆன்மாக்களையு மாயைகளிலே யொடுக்கி இந்த மாயாதி கன்மங்களுடேன ஆன்மாக்களையுஞ் சிவசத்தியிடத்திலே யொடுக்கி இந்தச் சத்தியையும் தம்மிடத்திலே கரந்துக் கொண்டு சிவமொன்றுமேயாய் நிற்கையில் பின்பு இந்தக்காலமானது சென்று சிருஷ்டிகாலமான வந்தரத்திலே தம்முடைய காருண்ணியத்தின் மிகுதியாலே இருந்த வான்மாக்களை பக்குவப்பட்ட கன்ம மலத்தைக் கூட்டி புசிப்பிக்கவு மாணவ மலத்தைப் பக்குவமாக்கும் பொருட்டு மந்தச் சத்தியை மீண்டும் பிரகாசிப்பித்து அந்தச் சத்தியிடத்திலே தாமும் பொருந்தி அந்தச் சத்தியில் ஒடுங்கிக் கிடந்த மலசகிதரான

ஆன்மாக்களையும் தோற்றுவித்து இவர்களுக்கு முன்பு விட்ட குறைக் கீடான ததுகரணபுவண போகங்களையும் கொடுத்து தாமும் முதல் கெடாமல் நின்றும் அதற்கமையவராயவர்களைக் கன்ம மலங்களுக்கீடாக நின்று புசிப்பித்து இப்படிச் செய்கிற தம்மையுமிந்தவுபகாரங்களையுந் தெரியாமல் விஷயாதிகளிலே யிரேசிக்கும் படி திரோபவித்து இந்த நாலு கிருத்தியத்தினாலுங் கன்மமும் துலையொத்து மலபாகமு முண்டாயிவர்களின் முத்திக்கும் பிராரத்தராவாரென்றனவரத்தும் பிராரத்தவர், ஆவார், என்று அனைவரும் திருவுள்ளத்தினாலனுக் கிரகமே பண்ணியிப்படியுள்ள பஞ்ச கிருத்தியங்களைத் தம்முடைய வருளாலே நடத்தி போதரகின்ற காலங்களினாலே பக்குவப்பட்ட வான்மாக்களையறிவர். அவர்களையனவுக்களவான தீக்கைகளாலே யிரக்ஷித்து முறைமையிலே கூட்டிக் கொள்ளுகையால் இச்தச் சத்தியுடைய சிவனே சர்வலோகங்களுக்குந் தாயுந் தந்தையுமென்ரறிவாயாக.

பக்குவப்பட்ட ஆன்மாக்களை தம்முடையவருளாலே நடத்திப் போதரநின்ற காலங்களிலேயிரக்ஷிக்கும் அஃது எப்படியெனில் அந்தச் சத்தியையுடைய சிவன் பக்குவப்பட்ட வான்மாக்களையறிந்து ஒரு மலத்துடனே நின்ற விஞ்ஞானகலரிற் பக்குவர்க்கு பிரானாய் நின்ற முறையிலே பிரகாசித்தும் இரண்டு மலத்துடனே நின்ற பிரளையாகலரிற் பக்குவர்க்குத் திவ்வியமான திருமேனியுடனே தோன்றி யந்தத் தரிசனத்தானும் இரக்ஷித்து மூன்று மலத்துடனே நின்ற சகலரில் பக்குவற்கு அவர்களைப் போன்ற திருமேனியுடனே தோன்றி எழுந்தருளி வந்து சத்தினிபாதத்துக் கிடனாய் நாலு வகைப்பட்ட தீக்கைகளாலுந் திருநோக்கால், பரிசத்தால், திகழும்வாக்கால், பாவனையால், மிகு நூலால், யோகப்பண்பால், என்கிற பிரமாணப்படியே ஆறுவகைப்பட்ட காருண்ணியத்தாலுமிரக்ஷிப்பர் இந்த முறைமைகளினாலே யனுக்கிரகியாநிற்பர்.

இப்படித் திருமேனி கொள்வாராகிலிவருமிந்த லோகங்களிலுள்ளாரிலே ஒருவராகக்கருதமாட்டார்களோ? எனில்.

அம்மையப்பர் எல்லா வுலகுக்கு மப்புறத்தார். அருளாலே திருமேனி கொண்டு இரக்ஷித்து அவருண்மையையாராயுமிடத்தும் பிருதுவி முதல் நாதமீறான தத்துவங்கருக்கு அப்பாற்பட்டு நின்றே யறிய வேண்டுகையாலறியப்பட்ட சத்தியுடைய சிவனுமிந்த சர்வலோகங்களுக்கு மப்பாற்பட்டே நிற்பன் சிவன்.



பிரபஞ்சத்துக்கு மற்பாற்பட்டே யிருப்பானாகில் பிரபஞ்சம் தானே நடந்ததோ? எனில்

இப்புறத்து மல்லார் போனிற்பராவர் தம்முடையவருளாலே சர்வலோகங்களையு நடத்தும் பொருட்டு தம்முடைய சொரூபந் தோன்றாதபடி யாறுவகைப்பட்ட வத்துவாக்களே திருமேனியாகக் கொண்டு தந்தாம் பிரச்சினையாலே பிரபஞ்ச நடவாநிற்கத் தாமவையவரானாசவின்றியே ஒரு பணியற நில்லா நிற்பர்.

உண்மை விளக்கம் – திருவதிகை மனவாசங் கடந்தார் அருளிச்செய்தது.

*"எட்டு மிரண்டும் உருவான லிங்கத்தே*
*நட்டம் புகல்வா நவிலக்கேள் – சிட்டன்*
*சிவாயநம வென்றுந் திருவெழுதுஞ் சாலே*
*யவாயமற நின்றாடுவான்*

அதாவது, எட்டுமிரண்டும் உருவாயிருக்கிறயகார மாகிய மாவிடத்தே பரமசிவன் பஞ்சாக்கரமே திருமேனியாகக் கொண்டு ஆன்மாக்கள் பிறவியறத்தக்கதாக நிருத்தஞ் செய்வார்.

எட்டு என்பது தமிழ் இலக்கம் – அ
இரண்டு என்பது தமிழ் இலக்கம் – உ
இது ரெண்டும் சேர்ந்தது தமிழ் இலக்கம் ய பத்தாகும்

இவ்வாறு கூறுகிறார்

*தோற்றந் துடியதனிற் றோயுந் திதியமைப்பிற்*
*சாற்றியிடு மங்கியிலே சங்கார – மூற்றமா*
*யூன்று மலர்ப் பதத்தி லுற்ற திரோத முத்தி*
*நான்ற மலர்ப் பதத்தே நாடு.*

டமரக மேந்திய ஸ்ரீ அத்தத்திலே சிருஷ்டி யாவும் அமைத்த ஸ்ரீ அத்தத்திலே ஆன்மா கிரக்ஷயாகவும் அக்கினி ஏந்திய ஸ்ரீ அத்தத்திலே மல சங்காரமாகவும் உறுதியாயூன்றிய ஸ்ரீ பாதத்திலே பிரபஞ்சத்தை மறைக்கும் திரோதமாகவும் தூக்கிய ஸ்ரீ பாதத்திலே அனுக்கிரக முத்தியாகவும் இந்த முறைமையிலே முத்தி பஞ்ச கிருத்தியமே திருக்கூத்தாகும்.

இன்னும்

*"ஆடும் படி கேணல் லம்பலத்தா னையனே*
*நாடுஞ் திருவடியிலே நகரம் – கூடு*
*மகர முதரம் வளர்தோள் சிகரம்*
*பகரு முகம் வாமுடியப் பார்"*

திருவம்பலத்தின் கண்ணே எழுந்தருளி நின்று நிருத்தஞ் செய்கிற முறைமை சொல்லுகிறேன். உன்னரிய பாதத்திலே நகாரமாகவும் பொருந்தப்பட்ட திருவுந்தியிலே மகாரமாகவும் மிகுந்த வெளிப்படா நின்ற திருத்தோளிலே சிகாரமாகவும் சொல்லப்பட்ட திருமுகத்திலே வாகாரமாகவும் திருமுடியிலே யகாரமாகவும் இந்த முறைமையிலே நமசிவாய மென்கின்ற பஞ்சாக்கரமே திருமேனியாகக் கொண்டு நிருத்தஞ் செய்வார்

*தனக்கேயடினாய்த் தன்னடைந்து வாழு*
*மெனக்கேயருளாவா றென்கொண் – மனக்கினிய*
*சீராளன் கவ்கை மணவாளன் செம்மேனிப்*
*பேராளன் வாறோர் பிரான்* 1.

*"யானே தவமுடையேன் எனநெஞ்சே நன்னெஞ்சம்*
*யானே பிறப்றுப்பான் எண்ணினேன் யானேயக்*
*கைம்மா வுரிபோர்த்த கண்ணுதலான் வெண்ணீற்ற*
*அம்மானுக் காளாயினேன்"* 2.

*"எனக்கனியி எம்மானை ஈசனையான் என்றும்*
*மனக்கினிய வைப்பாக வைத்தேன் – எனக்கவனைக்*
*கொண்டேன் பிரானாகக் கொள்வதுமே இன்புற்றேன்*
*உண்டே எனக்கரிய தொன்று"* 3.

இங்கே பதி என்றது முழுமுதற் பொருளாகிய கடவுள். ஆரூயிர்த் தொகை என்பது பசு. தளை என்பது பாசம். பாசத்தை பசுக்கள் விட்டுப் பதியினை அடைவதே முத்தியாகும். அதுவே உயிரடையும் பரமானந்த நிரியமாகியா மோட்சநிலை



இதனை

*"படிக்கு நூல்கள் சிவாகமம் பசு பாசமோடு பதித் திறம்*
*எடுத்தியம்புவ தீசன் வார்கழல் ஏத்திகுந் தொழிலென்றுமே*
*விடுத்திடும் பொருள்காமமாறிகள் வேண்டாடும் பொரு ளீண்டருள்*
*முடிந்து மும்மலம்விட்டு நின்மலனோடு நின்றிடன் முத்தியே"*
எனவரும் செய்யுளானும் அறியலாம்

இறுதியாக இறையின் இலக்கணத்தை விளக்க கடவுள் மாமுனிவர்

*தார்மேனின் நிலங்குபுய வழுதி மேலுந்*
*தன்மனை மங்கையர் மேலு மனமச் சர் மேனு*
*மார் மேலுஞ் சென்று பெருஞ் சேனைமேலு*
*மயன் மேலு மான்மேலு மறவோர் மேலுந்*
*தேர்மேல்வெம் பகல்மேலு மதியின் மேலுஞ்*
*சிறந்துள வின் திரன்மேலுந் தேவர் மேலும்*
*பார்மேலுங் கடன்மேலு மரங்கண் மேலும்*
*பட்டதரன் மெய்யிலடி பட்டபோதே*

இவ்வாறு கருதுகிறார்.

*அரன் அடியுண்டார் என்றால் அணுவும்*
*அடியுண்டது என்பது சைவ சித்தாந்தம்*

*தென்னாடுடைய சிவனே போற்றி*

*திருச்சிற்றம்பலம்*

# உயிரின் உள்பொருள்

இவ்வுலகில் வாழும் உயிரினங்களுக்குள்ளே பகுத்தறிவு என்னும் ஆறாம் அறிவுடைய மக்களாகப் பிறந்த இப்பிறவியின் நோக்கம் என்ன? இதன் உண்மைத் தன்மை என்ன? என்று அறிந்து இன்புற்று வாழ விரும்பும் தவப்பேறுடையோருக்கு அருள் நெறி காட்டுமாறெழுந்த சித்தாந்த சாஸ்திரங்களுள் முதல் நூலாயமைவது சிவஞானபோதம். இஃது பொது அதிகாரம். உண்மை அதிகாரம் என இருபெரும் பிரிவுகளையுடையது. பொது அதிகாரம் பொதுவான ஆரம்பம் எது என்றும், அதனை அறியும் வழிஎது என்றும் காட்டுவது. இவற்றுள்ளே பொது அதிகாரம் பிரமாண இயல், இலக்கண இயல் என்னும் இருபிரிவுகளையுடையது. உண்மை அதிகாரம் சாதனை இயல், பயன் இயல் என்னும் இரு பிரிவுகளையுடையது.

வேத சிவாகமங்கள் விளம்புகின்ற பதி, பசு, பாசம் என்னும் மூன்றும் உள்பொருள்கள் என்று அனுமானப் பிரமாணத்தால் நிரூபிப்பது பிரமாண இயல், அப்பொருள்கள் இலக்கணம் கூறுவது இலக்கண நூல். இவற்றின் அறிவைப் பெற்ற ஆன்மா செய்யும் சாதனையை விளக்குவது சாதனை இயல், இச்சாதனையால் அடையும் பயன் எது என்று கூறுவது பயன் இயல் ஒவ்வொரு இயலும் மூன்று மூன்று சூத்திரங்களை உடையதாய் இந்நூல் பன்னிரண்டு சூத்திரங்களை உடையதாயிற்று.

சடப்பொருளாகிய உலகம், சித்துப்பொருளாகிய உயிர்கள். இவற்றை இணைத்து இயக்கும் இறைவன் ஆகிய முப்பொருள்களில் முதலிடம் பெறுவது இறைவனாகும். அது மனிதனின் சிந்தனைக்கு அப்பாற்பட்டதாக இருந்தாலும் அதனைக் கடவுள் என்றும் "கந்தழி என்றும் தொல்காப்பியம் பெயரிட்டழைக்கிறது. அக்கருத்தினையே உவமானத்தின் மூலமாகத் திருவள்ளுவரும் விளக்கிக் கூறியுள்ளார். எவ்விதம் எழுத்துக்களெல்லாம் அகரத்தை அடிப்படையாகக் கொண்டுள்ளனவோ அதைப்போலவே உலகமும் ஒரு முதற் பொருளை அடிப்படையாகக் கொண்டுள்ளது. அதை நாம்

''அகர முதல வெழுத்தெல்லாம் ஆதி, பகவன் முதற்றே உலகு'' என்று காண்கிறோம்.



சைவசித்தாந்தத்தை விளக்க உள்ள நூல்கள்,

*"உந்தி களிறு உயர்போதம் சித்தியார்*
*பிந்திகிருபா உண்மை பிரகாசம் – வந்த அருட்*
*பாவுவினா போற்றி கொடி பாசமிலா நெஞ்சுவிடுதூது*
*உண்மைநெறி கற்பக முற்று"*

என்னும் வெண்பாவால் இவையிவையென உணர்ந்து கொள்ளலாம். சிவஞானபோதத்தின் முதன்மை உயர்போதம், என்றும் சொற்றொடரினால் அறிந்து கொள்ளலாம். இப்பதினான்கு சாஸ்திரங்களே சைவசித்தாந்தக் கொள்கைகளை அறியப்போதுமானவை என்பது எனது முடிபு.

ஆகமம் ஆலயம் அமைக்கும் முறை, இறைவழிபாடு, மனிதனின் சமயவழிபாடு, வாழ்வின் எல்லை, தத்துவ வாழ்வு என்பனவாக விரிந்து விரிந்த சிவாகமங்கள் இருபத்தெட்டு என்றும் சைவப் பெருமக்கள் கூறுவர். ஆனால் உபநிடதங்களை மறுப்பதற்கில்லை. உபநிடதம் என்றால் மறை பொருள்களை ஆசிரியன் அடியொற்றிக் கேட்டல். ஏனெனில் அவற்றுள் கூறப்பட்ட கருத்துக்கள் மனித வாழ்க்கையின் அடிப்படையை விளக்குவதாகும். ஆன்மாவின் உண்மையையும் இறைவனின் பெருமையையும் எடுத்துக் கூறுகின்றன. யோகத்தைப் பற்றியும் கூறுகின்றன. ஓங்காரத்தை உச்சரிக்கும்படி வலியுறுத்துகின்றன. சட உலகின் உட்பொருள் மாயை என்று சுட்டிக்காட்டுகின்றன. உபநிடதங்களில் கூறப்படும் கருத்துக்கள் எல்லாம் எல்லாக்காலத்திற்கும் எல்லா மக்களுக்கும் பொதுவானவை என்று குறிப்பிடுகின்றன.

கால மாற்றத்திற்கு ஏற்றுக்கொள்கைகளும் மாறுபடும், ஏனெனில் சித்தர்கள் பலப்பலவான கொள்கைகளையுடையவர்களாக முளைத்து வருகிறார்கள் என்பதைக் கண் கூடாகக் காணலாம். எனினும் அடிப்படைக் கொள்கையில் மாறுபடார்.

வேத ஆகமங்கள், உபநிடதங்கள் என்பவற்றில் உள்ள கருத்துக்கள் பண்டைக்கால கருத்துக்கள் தமிழ் மக்களின் சமயவாழ்க்கையினை கட்டிக் காப்பாற்றிவந்த கற்றூண்கள் என்று கூறினால் அது மிகையாகாது. அக்காலத்தில் அக்கருத்துக்கள் அங்கொன்றும் இங்கொன்றுமாகத் திகழ்ந்திருந்தன. சங்க இலக்கியங்களிலும் தொல்காப்பியரின் இலக்கணத்திலும் மிளிர்ந்தன என்பது மட்டும் நிச்சயமாகக் கூறமுடியும். சிவஞானபோதத்தைவிட ஏனையவை சித்தாந்த சாஸ்திரங்களின் கொள்கைகளைக் கூறும் பெருவடிவையார் அறிவார்.

*"ஆகமங்கள் எங்கே அறுசமயம் தானென்கே*
*வேதங்கள் எங்கே உணர்வெங்கே – பாகத்(து)*
*அருள்வடியும் தானுமாய் ஆண்டிலனேல் அந்தப்*
*பெருவடிவை யாரறிவார் பேசு"*

இவ்வெண்பா எமது சைவசித்தாந்தக் கொள்கை முடிவுக்கு உரித்தாகுகின்றது.

உயிர் – கடவுளைப் போலவே உயிர்களும் அனாதி நித்தியப் பொருள் உயிர்களின் எண்ணிக்கைக்கு அளவே இல்லை. இதுவரை முத்தி பெற்ற உயிர்களுக்கும் அளவே இல்லை. இனி முத்தி பெறுவதற்கு உரிய உயிர்களுக்கும் அளவில்லை. உயிர் அறியும் ஆற்றல் உடையதாயினும் அறுவித்த வழியே அறியவல்லது. அது ஆணவத்தோடு அத்துவிதமாய்க் கலந்து இருக்கும். கேவலநிலையில் ஒன்றையும் அறியாது சடமாகவே கிடக்கும். அதற்கு கருவி காரணங்களோடு கூடிய உடம்பு கிடைக்கும் போதே அது உடம்பின் உதவியால் அறிவைப் பெறுகின்றது. பளிங்கு போலச் சார்ந்ததன் வண்ணமாவது உயிரின் சிறப்பியல்பு. அது அசத்தாகிய உலகைச் சாரும்போது அசத்தாகியும் சத்தாகிய சிவத்தைச் சாரும்போது சத்தாகியும் நிற்கும். ஆதலால் அது சதசத்து எனப்படும். ஆணவப் பிணியிலிருந்து விடுவித்து உயிருக்குப் பேரின்பம் அருளுதற் பொருட்டே இறைவன் அதற்கு உடம்பு முதலியவற்றைக் கொடுக்கின்றான்.

உயிர் உடம்போடு கூடுவதே அதற்கு பிறப்பு ஆகும். இப்பிறப்பு உயிர் செய்த வினைகளுக்கு ஈடாகவருவது. இதை நல்வினை, தீவினைக்கு ஏற்றதாக நீந்தி கரைசேர்வதற்கு வழிகாட்டுவது சைவசித்தாந்தம். நீந்துவதற்கும் முதலில் உயிர்களை இருளில் ஆழ்த்தி வைத்திருக்கும் ஆணவம் என்று பெயர் பெற்ற மலத்தை விடுவிக்க வேண்டும். இது செம்பிற் களிம்பு போலவும் அரிசியில் தவிடு போலவும் கலந்து இருக்கிறது. நல்வினை ஆணவத்தை அடக்கிச் செய்வது தீவினை ஆணவத்தில் அடங்கிச் செய்வதாகும். இவ்வினையை அனுபவிக்க பிறவி எடுக்க வேண்டும். இப்பிறவி,

*"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்*
*செல்லா அநின்ற வித்தாவர சங்கமத்துள்*
*எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்"*

இது மாணிக்கவாசகரின் மணி மொழிகள்



இந்த ஆன்மாக்கள், ஆணவமலம் ஒன்றுடையவரை விஞ்ஞானகலர் என்றும், ஆணவம், கன்மம் என்னும் இரண்டுமுடையவரை பிரளயாகலர் என்றும், ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்றுடையவரை சகலர் என்றும், மூவகையாய்ப் பிரிக்கப்பட்டு சார்ந்ததன் வண்ணமாய்ப் பெயர் பெறும்.

ஒரு பொருளின் உண்மையை அளவை, இலக்கணம் ஆகிய இரண்டானும் அறியலாம். எடுத்துக் காட்டாக நெருப்பு உண்மையைப் புகையிருப்பதனைக் கொண்டு உணர்த்தலாம். வெப்பமிருப்பதைக் கொண்டும்உணர்த்தலாம். முன்னையது அளவையால் உணர்த்துவதாம். பின்னையது இலக்கணத்தால் உணர்த்துவதாம். இவ்வாறான அளவை சிவஞானசித்தியாரால் எடுத்துக் காட்டியிருப்பதை காணலாம்.

*"அளவை காண்டல் கருதல் உரை*
*அபாவம் பொருள் ஒப்பு ஆறென்பா*
*அளவை மேலும் ஒழிவு உண்மை*
*ஜதிகந்தோ டியல்பென நான் (கு)*
*அளவை காண்பர் அவையின்றினை*
*மேலும் அறைவர், அவையெல்லாம்*
*அளவை காண்டல் கருதல் உரை*
*என்றிம் மூன்றும் அடங்கிடுமே"*

இப்பாவின் விளக்கம் பரிமேலழகரின் பாற்படுவதைக் காண்போம். அளவை என்றால் பொறிகளை காணும் காட்சி, கருத்தா ஆகமம் என மூன்று. ஒப்பு பற்றி உணரும் உவமையும், இங்ஙன மன்றாயின் இது கூடாதென உணரும் அருத்தாபத்தியும், உண்மைக்கு மாறாய இன்மையும் என இவற்றைக்காட்டி ஆறு என்பாரும் உளர். இவற்றை எல்லாம் ஒன்று சேர்த்து திருவள்ளுவநாயனார். அருள் உடமையை விளக்க வரும்போது,

*"நல்லாற்றான் நாடி யருளாள்க பல்லாற்றால்*
*தேரினும் அஃதே துணை"* என்றும் *242ம் செய்யுள்*
*"அருள் சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை இருள் சேர்ந்த*
*இன்னா உலகம் புகல்'* *243ம் செய்யுள்*

என்று இரு குறள்களால் விளங்கினார்.

அதாவது அளவைகளாவன பொறிகளினால் காணும் காட்சியும், குறிகளால் உணர்த்தும் அநுமானமும், கருத்தா மொழி ஆகிய ஆகமமும் என மூன்று. ஒப்புக் கூறி உணரும் உவமையும், இங்ஙனன்றின் இது கூடாது என்றுணரும் அருத்தாபத்தியும் உண்மைக்கு மாறான இன்மையும் என இவற்றைக் கூட்டி ஆறு என்பாரும் உளர். இவை ஒரு வாற்றான் அவற்றுள்ளே அடங்குதலின் மூன்று என்றே கூறலாம். இது கூடாதென உணருந் தன்மையை வடநூலார் "உத்தி" என்பர்.

அருணந்தி சிவாசாரியர் குறிப்பிட்டுள்ள பத்துவகை அளவைகளை, மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார் தாம் இயற்றிய மணிமேகலையின் கண் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்.

சமயக் கணக்கர் தந்திறங்கேட்ட காதை (சமயக் கணக்கர் = சமயநூல் உணர்ந்தவர்கள்)

*"காண்டல் கருத உவமம் ஆகமம்*
*ஆண்டைய அருத்தாபத்தியோடு இயல்பு*
*ஐதிகம் அபாவம் மீட்சியொழி வறிவு*
*எய்தியுண்டாம் நெறி என்றில்லை தம்மாற்*
*பொருளின் உண்மை புலங்கொளல் வேண்டும்"* (27–9–13)

அளவைகளை எவ்வாறு கூறினும் பொருளின் உண்மை புலங்கொளல் வேண்டும். பௌவுத்த சமய நூலில் சைவசித்தாந்தம் இடம் பெற்றது.

அனுமானத்தினை முதல், எச்சம், பொது என மூன்றாகக் கருதலாம்.

(1) முதல் என மொழிவது கருக்கொள் முகில்கண்டு
இது மழை பெய்யுமென இயம்பிடுதல்

(2) எச்சம் என்பது வெள்ள ஏதுவினால்
நிச்சயித்து அத்தலைமழை நிகர்வு உரைத்தல்

(3) பொது எனப்படுவது சாதன சாத்தியம்
இவை அநுவபம் இல்லாதிருந்தும்
கடந்திகழ் யானைக் கான ஒலி கேட்டோன்
உடங்கெழில்யானை அங்குண்டென உணர்தல்



சைவசித்தாந்திகள் உலகு என்று குறிப்பிடும் போது எல்லா உலகங்களையும் அவற்றில் வாழும் எல்லா உயிரினங்களையும் குறிப்பிடுகின்றார்கள். அதில் அறிவுடைய பொருள் சித்து என்றும் அறிவில் பொருளை அசித்து அல்லது சடம் என்றும் கூறுவர் ஆன்மாவின் உண்மை விளக்கத்தை எடுத்துக் கொண்டால் சில உதாரணங்கள் வேண்டப்படுகின்றன. இரும்பைக் காந்தம் இழுக்கின்றது. இந்த ஈர்ப்பு தொழிலாலன்றி அறிவாலில்லை. இந்த நிலை பற்றியதை விடாது வைத்திருத்தல். ஆனால் ஆன்மா பற்றும் விடும். வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு இறறின் சேர்க்கையினால் சிவப்பு நிறம் உண்டாவதன்றி தனியே உண்டாவதில்லை. பஞ்சபூதங்களின் சேர்க்கையினால் உண்டாகும் தேகத்துக்கு ஒரே தன்மையைப் பெறவில்லை. புலன், பொறி, குணம் என்பன பல்வேறு தன்மைகளை உடையன. அவ்வாறுள்ள தேகத்தை அதிட்டித்தும் அதனின்றும் வேறாகவும் அறிவது. ஆன்மா என்பது கவனிக்கற்பாலது. அதனால்தான் பஞ்சபூதங்களின் சேர்க்கையால் உண்டாய தேகம் உறங்கும் காலத்தும் சவமாய்க்கிடந்தகாலத்தும் அறிவு தோன்றுவதில்லை. எனவே பஞ்சபூதங்களின் சேர்க்கை அறிவன்று என்பது சொல்லாமலே விளங்கும் உண்மையாகும். ஆகவே அறிவென்பது சடக்காரியமன்று சடத்தின் காரியம் சடமே என்பது சித்தாந்தக் தருக்க நூல் துணிபாகும்.

உள்ளூறலாகப் பார்த்தால் ஆன்மாக்கள் சகலர், பிரளயாகலர், விஞ்ஞானகலர் என மூவகையினர். இவர்கள் சகலர் மும்மலந்தர் ஆணவம், கன்மம், மாயை, பிரளயாகலர் இருமலத்தார், ஆணவம், கன்மம், விஞ்ஞானகலர், ஆணவம் ஒரு மலத்தார்.

மூவகை ஆன்மநிலைகள் : கேவலம்,சகலம், சுத்தம் எனவாகும்.
கேவலம் தேகமின்றி ஆணவமலத்தோடு நிற்றல்.
சகலம் : தேகம் எடுத்து வினைகள் செய்தல்.
சுத்தம் : பாசங்கள் நீங்கிப் பதியை அடைதல்.

இந்த ஆன்மாவை அவத்தைவகையாக கூறுபடுத்திக்காணும்போது, சாக்கிரம் – நனவு, சொப்பனம் – கனவு, சுழுத்தி – அழுத்தியசிந்தனை, துரியம் – போருறக்கம், துரியாதீதம் உயிர்ப்படக்கம் என்றும் தன்மையினை உடையதாகும். ஆன்மஎழுச்சிகள் : காணல், கேட்டல், உண்டல், உயிர்த்தல், உறங்கல் என ஐவகையாகும். இவைகள் நம்வாழ்வில் நாளாந்தம் நடந்து கொண்டே இருப்பதினால் நாம் வேறுவேறாகக் காண்பதில்லை. உற்று ஆராய்ந்து, கட்டுரைக்க வேண்டியதாக

இருக்கின்றன. ஆனால் ஒவ்வொன்றையும் தனித்தனி விளக்கினால் பெருகி பெரு நூலாகும்.

ஆன்மாக்கள் மும்மலத்தராய் தகுதிக்கேற்ப பிரிந்து விஞ்ஞாணகலர் ஒரு மலத்தவராவர். இவர்கள் தாமும் சிவனை மறப்பதற்கு அஞ்சுகிறார்கள்.

*"துறக்கப் படாதவுடலைத் துறந்து வெந் தூதுவரோ*
*பிறப்பன் இறந்தால் இருவிசும்பேறுவன் ஏறிவந்து*
*பிறப்பன் பிறந்தாற் பிறையணிவார்சடைப் பிபிஞ்ஞகண்பேர்*
*மறப்பன் கொ வோவென்றன் னுள்ளங் கிடந்து மறுகிடுமே.*

திருமாமறை - 114 - 8

இதை அப்பர் அடிகளும்

*"புழுவாப் பிறக்கினும் புண்ணியா வுன்னடியென்மலனத்தே*
*மறவா திருக்க வரந்தர வேண்டு மிவ் வையகத்தே*
*தொழுவார்க் கிரங்கியிருந்தருள் செய்பா திரிப்புலியூர்ச்*
*செழுநீர்ப் புனல்கங்கை செஞ்சடை மேல் வைத்த தீவண்ணனே"*

என்றார்.

இவைகளினால் நாம் விளங்கிக் கொள்வதுயாதெனில் ஆன்மா இறையை அடைய ஆசைப்படுகிறது. அப்படியான ஆசை ஓர் உடம்பை அடையும் அத்தருணம் பிறப்பும் உண்டு. இறந்தாலும் உன்னை மறவாதிருக்க வேண்டு மென்பது மெப்பிக்கதாயிற்று.

ஆன்மா இயற்கையில் தூயதாய் அறிவும் செயலும் இல்லாததாய் இருக்கும். புத்தி உலகப் பொருள்களை ஐம்பொறிகள் மூலம் சார்ந்து மாறுதல் அடைந்து வரும் இம்மாற்றத்தைப் புருடன் மயக்க உணர்வு காரணங்களைத் தனக்கே உளதாக எண்ணித் துன்புறும். காரணகாரியமாக நிற்கும்போது அவிச்சை என்கிற மயக்க உணர்வு நீங்கும். அப்படித் தூய உணர்வு நிற்பதே முத்தி நிலையாகும். முத்திநிலை என்பது புதிதாக உள்ள பொருளல்ல உயிரானது தனது வினைப்பயனை முடித்துக் கொண்டு அடையும் அடக்கமான ஓர் நிலை. இஃதே கண்ணாரக் கண்டுகளிக்கக் கூடியதல்ல வாழ்க்கையின் கடைசிப் பெறுபேறேயாகும். இந்நிலைக்கு இறை உறையிட்டுள்ளார். உயிர் என்ற ஒன்று இல்லை எனக்கூறுமிடத்து இறையும் வேண்டியதில்லை. இரண்டும் ஒன்றை ஒன்று பிரிபட உள்ளதல்ல "அன்றே என்தன் ஆவியும் உடலும் உரிமையும் எல்லாம் ஆட்கொண்ட போதே" என்றார் மணி மொழிவாசகனார்.

சித்தருள் சித்தரான திருமூல நாயனார் சைவ சித்தாந்தத்தின் உணர்வால் உந்தப்பெற்று தனது வாழ்க்கையின் பயனால்



*"இன்புறு வண்டிங் இனமலர் மேற் போய்*
*உண்பது வாச மதுபோல் உயிர் நிலை*
*இன்புற நாடி நினைக்கிலு மூன்றொளி*
*கண்புற நின்ற கருததுள் நில்லானே!"* திருமந்திரம் 194

என்றார்

இவ்வுலகம் உயிரும் உயிரின் பொருளுமாகக் காட்சி அளிக்கிறது. இவ்வாறு காட்சியளிக்கச் செய்வதுதான் உலகப் படைப்பு என்பது. உயிர்கள் ஆக்கப்படுவது மில்லை அழிக்கப்படுவதுமில்லை. இறைவன் என்று உண்டோ அன்றே ஆருயிர்களுண்டு. இறைவன் ஒருவன் உயிர்கள் எண்ணிறந்தன. செம்பின் கண் களிம்பு உடனிருப்பது போல உயிர்களிடத்தே மலம் உடனிருக்கிறது. களிம்பு நீங்கிய செம்பு ஒளிவிட்டுத்திகழும். அது போல மலம் நீங்கிய உயிர் ஞான ஒளி சிறந்து பேரின்பம் எய்தும். செம்பின்கண் களிம்பு எப்போ? ஏன் உண்டானது என்ற வினாவுக்கு விடை இல்லை. அது போல உயிர்கட்கு மலம் எப்போ? ஏன் உண்டானது என்ற வினாவும். அறிஞ்ஞர்கள் அனாதி சம்பந்தம் என்று முடிப்பர். அனாதி என்றதற்கு எல்லை இல்லை "அன்றோ எந்தன் உடலும்" என்று மணிவாசகர் கூறியதும் அதுவே.

இவ்வுலகத்திற்கு முதற்காரணம் ஒன்று உண்டு. உயிர்ப் பொருளாகிய இவ்வுலகம் ஒடுங்குங்கால் முதலில் நுண் பொருளாய் ஒடுங்கும். அதுவே பின்னர் ஆற்றலால் விரிவடையும். இறைவன் ஒளியும் ஒளிப்பொருளும் போன்றவன். ஒளிப் பொருள் நின்றும் நீங்காமல் இருக்கும். ஒளி போல அவனிடத்தினின்றும் நீங்காமல் இருப்பது அவனது அருள். அஃது அருட்சத்தி என்று வழங்கும். ஆற்றலால் ஒடுங்கி, விரிந்த மாயை அருட்சத்தியை அடையும். உடம்பும், கருவியும் பொருளும் உலகுமாக விரிந்து காட்சிபடச் செய்யும். முதற் காரணமாகக் கொண்டு உயிர்கட்குரிய உடம்பொடு கூடிவாழும் உயிர் மல மறைப்பு நீங்கி அறிவு விளங்கப் பெறுகிறது. உயிர்க்கு அந்த நன்னிலை எய்த வேண்டுமென்ற பேரருளால் இவ்வுலகம் மீளப் படைக்கப்படுகிறது. அறிவாக இருக்கும் உயிரோடு கொண்ட அனாதி சம்பந்தத்தால் மலம் அதன் அறிவை மறைத்து உலகிடைத் தோன்றிப் பெறுதற்கரிய அறிவு விளக்கத்தை நிரம்பப் பெறாதவாறு தடை செய்கின்றது. அறிவு விளக்கம் பெற்று அதன் வழியாகஎய்தும் பேரின்பத்தை நுகர்வதுதான் உயிரின் நோக்கம். அதற்குத் துணை புரிவது உடல்கருவி முதலியவற்றிற்கு முதற்காரணமாகிய மாயை.

இதை மெய்கண்ட தேவர்

*"அவன் அவள் அது என்னும் அவை மூவினைமையின்*
*தோற்றிய திதியே ஒடுங்கி மலத்துளதாம்*
*அந்தம் ஆதி என்மனார் புலவர்"*

என்று அறிவு தருகின்றார். இதுகாறும் கூறியவற்றுள் இது தான் இறை. இதுதான் உயிர் என அவனரளாலன்றி தூரதிருஷ்டியால் விதந்து கூறமுடியாதென்பதை அறிந்து கொண்டீர்கள்.

உயிர்கள் முன்பு பிறந்து வாழ்ந்த நாள்களையும் இனிப்பிறந்து வாழப்போகின்ற நாள்களையும் அறுதியிட்டுச் சொல்லயியலாது. இதுவரை மோட்சம் அடைந்த தொகையும் இனி அடையப்போகின்ற தொகையையும் சொல்ல முடியாது. இந்த ஆன்மா மும்மலத்தினால்பிரிக்கப்பட்டு வெவ்வேறு பெயர்களைப் பெற்றன என்பதை முன்னமே கூறினோம். உயிர்கள் தாமாகவே ஒன்றை அறியாமல் ஐம்பொறிகளின் உதவியால் அறிவனவாதலால் அவற்றுக்கு அறிவு என ஒன்று உண்டு எனக்கூற முடியாது என்பது பொருந்தும். ஆன்மாக்கு அறிவுண்டு இச்சை தொழில் என்பனவும் உண்டு. விழியிலார்க்கு ஏது விளக்கு என்பது பழமொழி விளக்கு இருட்டுத்தன்மையை போக்கும் குருட்டுத்தன்மையை போக்காது. ஆகவே ஆன்மா சுத்த அறிவுமல்ல அறியமாட்டாத சடமும் அல்ல ஆன்மா சத்தைச் சார்ந்து நிற்கும் நிலை முத்தி, அசத்தைச் சார்ந்து நிற்கும் நிலை பெத்தம்.

கண்ணாடி, படிகம், கண் என்பன இருளில் இருளாகியும் ஒளியில் ஒளிவிட்டும் விளங்குவன. இவற்றைப் போலவே ஆன்மாவும் ஆணவத்தோடே கூடும் பொழுது அறியாமையும், திருவருளோடு கூடும்போது மெய்யறிவும் பெறும் இயல்பானது.

உமாபதி தேவநாயனார் அருளிச்செய்த திருவருட்பயனில் வரும் அணி விளக்குகிறது

*"ஊமன்கண் போல ஒளியும் மிகவிருளே*
*வாமன்கன் காணா தவை"* *63ம் பக்கம்.*

கூகையின் கண்ணுக்குச் சூரிய ஒளி தெரியாதது போல இறைவன் அருளிச் செய்யும் ஞானத்தைக் காணாத ஆன்மாக்களுக்கு சிவமாகிய ஒளி அவ்வான்மாக்களுக்கு தோன்றாது நிற்கும்.

அதாவது ஆந்தை இனத்தைச் சேர்ந்த கூகைக்குத் தசைத்திரள் கண்ணை மறைப்பதால் சூரிய ஒளி தெரிவதில்லை. அது கண்ணின் குற்றம் சூரியன் குற்றமன்று. இவ்வாறே ஆன்மாக்கள் இறைவனின் வியாபகத்திலிருந்தும் ஆணவ மறைப்பால் இறைவனை அறிவதில்லை. (மன்கண் = சிவஞானம்) (மன் = சிவன்)



நாம் இருக்கிறோம் இதில் சந்தேகம் இல்லை. நாம் பலராக உள்ளோம், மற்றும் ஓரறிவு முதல் பலதிறப்பட்ட உயிர்களும் பல உள்ளன. உயிர் உண்மை பற்றி மதவாதிகளிடத்தே கருத்து வேறுபாடுகள் உண்டு. அக்கருத்து வேறுபாடுகளை தருக்கரீதியாகச் சிவஞானபோதம் வாசித்து முடிவுகட்டுகிறது. சைவ சித்தாந்தப்படி உயிர் என்ற தனிப்பட்ட பொருள் உண்டு என்பது கொள்கையாம். வேறு பல சமயங்கட்கும் இச்சித்தாந்தம் உடன்பாடே. ஆன்மா என்பதே இல்லை என்பாரும் உளர் "எனது உடல்" என்று பேசுவதே உடலுக்கு அந்நியமான பொருள் உள்ளது என்பதை ஒத்துக் கொள்ளுகிறது. அப்பொருள் உயிராகும். இவ்வாறான விபரங்களை சிவஞானபோதம் முதலிய நூல்கள் எடுத்து விரிக்கின்றன. ஆன்மாக்கள் யாவும் ஒரே ஆன்மாதான் என்றால் ஓர் ஆன்மாவுக்குள்ள அனுபவம் எல்லா ஆன்மாக்கட்கும் நிகழ நேரும். அப்படி நிகழக் காண்கிறோம். ஆதலின் ஆன்மாக்கள் தனித் தனியாகப் பல உள எனத் தெரிதல் கூடும். ஆன்மாக்களே இல்லை எனின் இறைவனின் தேவை எதற்கு? இறைவனே இல்லை ஆன்மாக்களே இறைவன் எனின், ஆன்மாக்கள் துன்பமுறக் காரணம் இல்லை. ஆதலால் ஆன்மாக்களும் உள. இறைவனும் இருந்தே தீரவேண்டும் என்பது பெறப்படும் ஆன்மா உண்டு ஆன்மாக்கள் பல என்று ஏற்பட்ட பின்னர் ஆன்மாக்களின் எண்ணிக்கை என்ற வினா எழுதல் இயல்பாம். எண்ணிக்கை இவ்வளவு என அவ்வளவு ஆன்மாக்களும் நற்கதி பெற்ற பின்னர் உலகம் தேவை இல்லை என்பதாகும். அன்டங்களும் ஆன்மாக்களும் இல்லாது போயின் இறைவனுக்கு பணி ஒன்றும் இல்லையாம். ஆதலின் இறை என்னும் பொருள் புலப் படாமற்போம். ஆதலால் ஆன்மாக்கள் கணக்கிட முடியாதனவாக இருக்க வேண்டும். ஒவ்வோர் ஆன்மாவும் பற்பல பிறவியை எடுக்கும் தன்மையையும் கொண்டுள. ஒரு சில பிறப்புகளும் ஒரே பிறப்பு மட்டில் உடையனவாகிய பற்பல ஆன்மாக்களும் உள. ஆக இவை யாவும் எவ்வளவு என்ற கணக்கை அறிவதெப்படி. துறந்தார் பெருமையின் அளவு கூற வந்த தெய்வதிருவள் இப்படித்தான் கூறுகிறார்.

*"துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து*
*இறந்தாரை எண்ணிக் கொண்டற்று'*

இது நம்மையே சிந்திக்க தூண்டுகிறது.

உலகின் பிறந்தவர்களில் இதுவரையில் எத்தனை பேர்கள் முத்தி பெற்றுள்ளார்கள் என்பதை எப்படி நாம் அறிந்து கூறமுடியும். நமக்கு முன்னுள்ள நிலைமையை நம்மால் கணித்துக் கூற இயலாது. என்பதை ஒத்து கொள்ளுவோம்.

எத்தனை பேர்கள் மோட்சத்தை அடைபவர்கள் என்று கேட்டாலும் அது நமக்குப் பின்னால் நிகழ்வது ஆகலின்அதையும் நம்மால் கணித்துக் கூற முடியாது. வானத்து மீன்கள் கடலின் நீர்த்துளிகள் இவைகளை எவர் கணக்கிட முடியும்.

மாயா புவனத்திலுள்ள ஆன்மாக்களின் நற்கதி பெற்றவும், பெறுகின்றவும், பெறுவனவுமாய ஆன்மாக்களின் தொகையையே. நாம் கணக்கிட முடியாது. கணக்கிட்டாலும் நமக்குப் பயன் ஒன்றுமில்லை. கால தத்துவமானது இறந்த காலம், நிகழ் காலம் எதிர்காலம், என்பனவாக சென்றும். இருந்தும், வந்தும் என வகுத்து ஆன்ம வர்க்கமும் உண்டு என்பதை அறிந்தும் ஆண்டும் கொள்வோம். இவற்றினால் ஆன்மா உண்டு எனவும் ஆன்மாக்கள் எண்ணில என்பவம் வெளிப்படையாகிறது.

உயிர்கள் உள்பொருளாம் அவை அளப்பரியன. அவ்வுயிர்கள் விஞ்ஞானகலர். முதலாக மூவகைப்படும். நாம் சகலர் வகையினர் உயிர்கள் இல்பாகவே ஆணவ மலத்தால் பிணிக்கப்பட்டுள்ளன. ஆன்மாக்கள் சுதந்தரமுடையன அல்ல. அறிவிக்க அறியும். சித்துத்தன்மை யுடையன. ஆன்மாக்களிடம் ஆன்ம அறிவு உண்டு. ஆதலால் அவை சடமல்ல. ஆன்மாக்கட்கு உணர்த்த உணர்வும் அறிவு இருந்ததால்தான் தத்துவங்களும் இறையும் அவைகளுக்கு பயன்படுமாறு உள்ளன. அறிவு இல்லையாயின் ஆன்மா பயனடைய இல்லாது போம். ஆன்மா சார்ந்ததின் வண்ணமாம் தன்மையுடையது. அது சத்தையும் சாரும் அசத்தையும் சாரும். இதனால் இதை சதசத்து என்பர். அநாதியே ஆணவமலம் ஆன்மாவுக்கு இருந்ததால் இறை ஞானத்தை அறிந்து கொள்ள முடியவில்லை ஆதலின் ஆன்மா தன்னுடைய அறியாமையினின்று நீங்க வேண்டும் அதற்கு திருவருள் கூடவேண்டும் கூடின் இன்புறும்.

*திருச்சிற்றம்பலம்*

*எல்லாப்பிறப்பும் பிறந்திளைத்தேன்*
*எம்பெருமான் மெய்யேயுன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்.*

*மணிவாசகர் மணிமொழி*



# தளை

இதை நூலோர் பாசம், எனக் கூறுவர் அவை ஆன்மாவைப் பந்தித்து நிற்பதால் பாசம் எனப் பெற்றன. அவற்றை மலம், கட்டு, தளை, பந்தம் எனவும் கூறுவர்.

இம்மலம் ஆன்மாவுக்கு அநாதியிலே உண்டானதாகையால் மூவகை எனவும் சகசமம் எனவும் கூறுவர். இதற்கு பசுத்துவம், அஞ்ஞானம், அவித்தை, அசுத்தி களங்கம், மோகம், தமசு, சடம் முதலிய பெயர்களுமுண்டு. மூலமலமாகிய ஆணவம் நெல்லுக்கு உமிபோலவும் செம்பிற் களிம்பு போலவும், உயிரைப் பொருந்தி நிற்கும். பற்று என்று சுவாமி மாணிக்கவாசகர் சிவபுராணத்தில் "பாசமாம் பற்றறுக்கும் பாரிக்கு மாரியனே" என்று வியந்துள்ளார்.

கண்ணை மறைத்து நிற்கும் இருள்போல் ஆணவமலம் ஆன்மாவின் அறிவை மறைத்து நிற்கும். இருள் பிறபொருள்களைக் காட்டாதாயினும் தன்னைக்காட்டி நிற்கும். ஆனால் ஆணவம், பிறவற்றையும் காட்டாது தன்னையும் காட்டாது அதற்கு எட்டுக்குணங்கள் உண்டு.

| | | |
|---|---|---|
| விகற்பம் | – | தன்னைவிடப் பிறர் ஒவ்வாரெனல் |
| கற்பம் | – | பிடித்ததைப் பிடித்திருத்தல் |
| குரோதம் | – | கோபங்கொண்டு நினைத்தல் |
| மோகம் | – | ஒன்றுக்கு ஆசைப்படுதல் |
| கொலை | – | உயிர்களைக் கொல்லுதல் |
| அஞர் | – | சந்ததமும் துக்கப்படுதல் |
| மதம் | – | அகங்காரம் மேலிடுதல் |
| நகை | – | சிரித்தல். |

இத்தகைய குணங்களால் பல இச்சைகள் உண்டாகும். இச்சைகளால் வினைகள் உண்டாகும். எனவே ஆணவம் கன்மத்துக்கு வித்து எனப்படுகிறது.

கன்மம் : கன்மம் மாயை என்னும் மலங்களும் இடைக்காலத்தில் வந்து செயற்கையாகக் கூடுவன. எனவே இவற்றை ஆகந்துவமலம் என்பர். இவை

மூலமலமாய ஆணவத்தை நீக்குவதற்கு உதவியானவை. கன்மம் நியதி என்றும் தத்துவத்தால் உயிரைவந்தடையும் கன்மம் உயிருக்கு ஆயுள், போகம் முதலியவற்றைத் தருவது. அது மனம், வாக்கு, காயம் என்னும் மூன்றிலும் வந்தடைவது.

கன்மத்தினால் இருத்தல், கிடத்தல், விடுதல், இயற்றல், பரநிந்தை, மேவல் ஆகிய நிகழ்ச்சிகள் நம்வாழ்க்கையில் உண்டு. இவற்றின் தொழிற்பாடாக, இந்திரிய வழிச்செல்லுதல், அவ்வழியில் ஒடுங்கி நிற்றல், முயலுதல், நன்மை தீமைகளைச் செய்தல், பிறன்பழி கூறல் பல பிறப்புகளில் மேவுதல் ஆகியவற்றைச் செய்கிறோம் இவைகள் நம் நினைவுக்கு வருவனவல்ல. ஆனால் அன்றாட வாழ்க்கையின் ஆழத்தை நோக்கினால் இவைகள் நிகழ்ந்து கொண்டே போகின்றன என்பதைக் காணலாம்.

கன்மம் சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமியம் அதாவது தொகைவினை, துவக்க வினை, மேல்வருவினை என மூன்றாகும்.

மாயை – இதன் சிறப்பை சிற்பியாகிய திருமூலர் பின்வருமாறு கூறுகிறார்.
ஆகந்துவம் – இடையில் வந்தது.
பிரவாக அனாதி – ஆறு தொடர்வது போல ஒடுவது.

*"மரத்தை மறைத்தது மாமத யானை*
*மரத்தில் மறைந்தது மாமதயானை*
*பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்*
*பரத்தின் மறைந்தது பார்முதற் பூதமே"* *2290*

அதாவது மரத்தால் செய்யப்பெற்ற யானைப் பதுமையைப் பார்க்கும்போது மரத்தைப் பற்றிய காட்சி இல்லை. வர்ணங்களை அகற்றி புறநிலையை மாற்றி பார்க்கும் போது யானையின் காட்சி மறைந்து போகிறது மரத்தில், மரம்மாத்திரம் தான் காணக்கூடியதாக இருக்கும் அதுபோல் பரத்தால் விளக்கம் பெற்ற பார்முதலிய பஞ்சபூதங்களை குருவருளால் பார்க்கும்போது பரமானது காட்சிக்கு ஆவதில்லை. குருவருளால் பார்க்கும் போது பரமே காட்சியளித்து பார்முதலிய பஞ்சபூதங்களை மறைத்தன. குருவருளால் ஆன்ம ஒளியை உணர்ந்தபோது பஞ்ச் பூதங்களின் செயல்கள் பரத்தில் ஒடுங்கி விடும்.



எல்லாம் தன்னிடத்தில் ஒடுங்கவும் தன்னிடத்தில் தோற்றவும் காரணமாய் நிற்பது மாயை (மா–ஒடுங்குதல், யா–விரிதல்), இது மூவகை சுத்தமாயை, அசுத்தமாயை, பிரகிருதிமாயை, இவற்றிலிருந்தே முப்பத்தாறு தத்துவங்களும் தோன்றுவன. சுத்தமாயையில் ஐந்து தத்துவம் தோன்றும். அசுத்தமாயையில் ஏழு தத்துவந்தோன்றும் பிரகிருதி மாயையில் இருபத்து நான்கு தத்துவங்கள் தோன்றும். நாமெல்லோரும் இம்முப்பத்தாறு தத்துவங்களில் அடங்கியுள்ளோம். ஆனால் கடவுள் தத்துவங்களுக்கு அப்பாற்பட்டவர். அவர் தத்துவாதீதர்.

தத்துவம் என்றால் உண்மை, உள்ளதன் தன்மை, மெய்யெனப்படும். மண், நீர், தீ, காற்று, ஆகாயம் முதலியன எங்கள் உடம்புபோலன்றி ஊழிக்காலம் வரை அழியாமல் நிற்பன, அழியாததால் தத்துவம் எனலாம். முப்பத்தாறு தத்துவங்களையும் சோபானம் என்னும் படிக்கிரமத்தில் கடந்து சென்று தத்துவாதீனனாய கடவுளை அடைவதையே சைவசித்தாந்தம் கூறும்.

**சுத்தமாயை :-** இது மலங்களுடன் கலவாததாய், சுத்தகாரிய பிரபஞ்சத்துக்கு முதற்காரணமாய் நித்தியமாய், விபாபகமாய், அருவாய், சடமாய் இருப்பது இதற்கு விந்து, குடிலை, மாயை என்னும் யெர்கள் உண்டு. சுத்தமாயையில் இருந்து தோன்றுவது சிவதத்தும் எனப்படும். அவை நாதம், விந்து, சாதாக்கியம், ஈசுரம், சுத்தவித்தை என ஐந்தாகும். அவை ஒன்றில் இருந்து ஒன்றாகத் தோன்றும். இவற்றின் கருத்தாக்கள் முறையே சிவம், சக்தி, சதாசிவம், மகேசுவரன், உருத்திரன் ஆவர்.

சிவதத்துவம் முதல்வனுக்கு இடமாய் ஏனையவற்றைச் செலுத்தி நிற்றலில் பிரேரகாண்டம் எனவும் பெயர்பெறும். சுத்தமாயையில் வாக்குகள் அட்சரங்கள், பதங்கள், மந்திரங்கள், புராணங்கள், போகங்கள் தோன்றும்.

**அசுத்தமாயை :-** அசுத்தமாயை சுத்தமாயையின் கீழ் அடங்கி ஆணவம், கன்மம் என்னும் மலங்களுடன் கலந்து காரிய பிரபஞ்சத்துக்கு முதல் காரணமாய் நிற்பது. இதை மிச்சிரமாயை, அதோமாயை எனவும் மோகினி எனவும் கூறுவர். தனு, கரணம், புவனம், போகம் என நான்கு விதமாய் அசுத்தமாயை விளங்கும். அது அழிவில்லாததாய் ஆன்மாக்கள் கன்மத்தைப் புசிக்கும் வரை தாரகமாய் நிற்கும். இதில் காலம், நியதி, கலை, வித்தை, அராகம் என்பன ஒன்றில் இருந்து ஒன்றாகத்

தோன்றும். இந்த ஐந்தும் ஆன்மாக்களுக்குச் சட்டைபோல அமைவதால் பஞ்சகஞ்சகம் எனப்படும். அசுத்த மாயையில் வித்தியாதத்துவம் தோன்றும் வித்தியாதத்துவம், காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை என ஏழாம். இவை ஆன்மாவுக்குப் போக நுகர்ச்சிக்கு உரிமை செய்து நிற்பதால் போகசயித்திருக்காண்டம் எனப் பெயர் பெறும்.

**பிரகிருதிமாயை :-** இது அசுத்த மாயையின் தூலபரிணாமமாய், அசுத்த காரியப் பிரபஞ்சத்துக்கு முதற்காரணமாய் இருப்பது. இதிலிருந்து ஆன்மதத்துவம் தோன்றும் இதை மான் எனவும் கூறுவர். ஆன்மதத்துவம் ஆன்மாவுக்கு கருவியால் பயன்படுத்தலின் போக்கிய காண்டம் எனப்படும். இவற்றுள் பூதங்கள் ஞானேந்திரியங்கள், கன்மேந்திரியங்கள், தன்மாத்திரைகள், அந்தக் கரணங்கள் அடங்குவன. இவற்றை மூலப்பிரதி எனவும் கூறுவர். தொடக்கத்தில் மாயை என்ற சொற்றொடரை விளக்கியுள்ளோம்.

வேதாந்த தர்சனத்தில் மாயாதத்துவம் முக்கியமான இடம் பெற்றிருக்கிறது. சமய சாஸ்திரங்கள் எதுவானாலும் இக்கோட்பாட்டைப் புறக்கணிக்கக் கூடாது கைக் கொள்ளவே வேண்டும். உலகில் உள்ள எல்லா மதங்களிலும் இடம்பெறுகின்றது. இக் கோட்பாட்டை ஏதேனும் ஒரு வளியில் எடுத்து கொள்ளாத சமயம் சமயமாகாது. "யா" என்பது யாதொன்று, "மா" என்பது ஒரு கணத்திற்கு முன்பு இருந்தது போன்று பின்பு இல்லை. இப் பதம் வடநாட்டுக்குரியது. மாயா என்பது ஓயாது மாறியமையுந் தன்மை. இத்தன்மை எதனிடத்து இருக்கிறதோ அது மாயை. ஆகவே மாயை என்பது பிரபஞ்சம் என்னும் இடத்தை அடையும். அதாவது ஓயாது தன்வடிவத்தை மாற்றிக் கொண்டே இருக்கும் தன்மை நிலைபேறு என்ற சொல்லுக்கு இடமே இல்லை.

நாம் பிறப்பது, இறப்பது, வளர்வது, வாழ்வது, தேய்வது, நீழ்வது, சுருங்குவது எல்லாமே மாயை. நாளைக்கு உலகம் அழிந்து போகிறது என்றால் அதுவும் மாயை. அண்ட கோடிகளனைத்தும் மாயை, சிற்றுயிர்கள் பேருயிர்களாக இருப்பதும் மாயை. உயிர்கள் முத்தியடைந்து திகழ்வதும் மாயை. காலச்சக்கரம் ஓயாது சுழன்று கொண்டே இருக்கிறது. இது ஒரே பாங்கில் இருப்பதில்லை. சமயம் என்ற பெருமரத்தில் பல கிளைகள் உண்டு அதில் பறவைகள் எங்கிருந்தாலும் அவைகளைத்தாங்குவது அடிமரமே.

திருவாசகம் திருவண்டப்பகுதியில்,



*"அறுவகைச் சமயத் தறுவகை யோர்க்கும்*
*வீடுபேறாய் நின்ற விண்ணோர் பகுதி*
*கீடம் புரையுங் கிழவோன்"* *திருவண்டப்பகுதி 17ஆவது வரி.*

என்றார் மணிவாசகனார்

கீடம் = புழு

சொரூபத்தில் தன்னை மாற்றுக்காண்பித்து வருகிறது காலம். அது ஒரு மூர்த்தியாக வடிவெடுத்து அனைத்தையும் விழுங்கி வருகிறது. கடைசியில் தானும் நாசமடைகிறது. தேசம் அல்லது இடம் இயங்குவது மாயை. அளப்பரிய அண்டங்கள் இடத்துக்கிடம் பெற்றிருக்கின்றன. பின்னர் இடத்தில் அவைகள் ஒடுங்கி அந்த இடம் இல்லாது பிரவாகாயத்தில் ஒடுங்குகிறது.

வர்த்தமானம் அல்லது காரண காரியமாகிய செயல்களாக வடிவெடுத்திருப்பது மாயை, கடக்க முடியாத கர்மமாய் இருப்பது மாயை. கால, தேச, வர்த்தமானம் என்னும் மூன்று வித ஜால வித்தைகளாக விளங்கிக் கொண்டிருப்பது மாயை, சிவன் பிரபஞ்சத்தைக் காண்கிறான். மனது தோற்றத்திற்கு வரும்போது உலகில் வாழ்கிறான். அவனுக்கு உல கம் இருப்பது முற்றிலும் மனதைப் பொறுத்தது, மனம் இன்னுமொன்றைப் பின்பற்றுகிறது. ஆழ்ந்த உறக்கத்தில் மனது ஒடுங்கும் போது உலகம் இல்லாதிருக்கிறது. கனவில் தனக்குள்ளேயே அது ஒரு உலகை உண்டுபண்ணுகிறது. அது அமைத்துக் கொண்ட உலகுக்கு ஒப்பப் புறத்தில் ஒன்றுமில்லை. இல்லாததை இருப்பது போன்று மனது காட்டிக் கொடுக்கிறது. இதைக் கொண்டே உலகம் ஓர் இந்திரஜாலம் எனவர்ணிக்கிறார்கள் உயர்ந்தோர்.

மாயையின் தோற்றங்கள் அனைத்துக்கும் இகம் என்று பெயர். இகம் பரம் ஆகிய இரண்டும் பரவஸ்துவில் இடம் பெற்றிருக்கின்றன. திரையில் படம் தென்படுவது போன்றும் கண்ணாடியில் விம்பம் தென்படுவது போன்றும் பரவஸ்துவில் இடம் பெற்றிருக்கின்றன. இந்த மாயையில் கட்டுண்டிருப்பது வாழ்க்கையின் குறிக்கோள் அல்ல. பரமனைச் சார்ந்திருந்து மாயையைக் கடந்து அப்பால் போவது குறிக்கோள். சமயங்கள் வெவ்வேறு விதங்களில் விளக்கியிருக்கின்றன. விளக்கங்களில் உள்ள வேறுபாடுகள் முக்கியமானவைகள் அல்ல. மாயைக்கு அப்பால் இருக்கும் பரமனின் பாதத்தை அடைவதே முக்கியம்.

பரம்பொருளை அடையமுடியுமா? என்னும் வினா எழுகிறது. முடியும் என்று சைவசித்தாந்தம் எடுத்துக் கூறுகிறது. இதை இலகுவாக விளங்கக் கூடாது.

நனவு, கனவு, கனவற்ற உறக்கம் ஆகிய மூன்றுக்கும் முறையே சாக்ரம், சொர்ப்பனம், சுஷந்தி என்று பெயர் இந்த மூன்று அவஸ்தைகளும் போக்கு, வரவு உண்டு. ஆகையால் இவையாவும் மாயாகாரியங்கள். இம்மூன்றுக்கும் ஆதாரமாய் இருக்கும் பிரக்ஞானமே பிரம்மம். அது துரியம் என்று அழைக்கப்பெறுகிறது. அதற்குப் போக்கு வரவு இல்லை. சமய வாதிகள் அதைத் துரியம் என்பர் அன்றியும் துரியாதீதம் என்றும் அழைப்பர். ஆனால் சுத்த மனதும், மாயாகாரியமே மாயையுக்கு அப்பால் இருப்பது. இரண்டும் பொருள்கள் அல்ல, துரியம் மனதுக்கு அப்பாற்பட்டது. அது ஏகவஸ்து. பேச்சளவில் அது துரியம் என்றும் துரியா தீதம் என்றும் இரண்டு நிலைகளில் வைத்துச் சொல்லப் பெறுகிறது.

மாயை என்பது பிரபஞ்சத்துக்கு அமைந்துள்ள மற்றொரு பெயர் எது ஒரு கணப்பொழுதுக்கு முன்பு இருந்தது போன்று பின்பு இருப்பதில்லையோ அது மாயை. பிரபஞ்சம் மாயை என்பது வெளிப்படை, ஜீவாத்துவமான பலகோடி பிறவிகளில் பிறந்து பக்குவமாய் வரும்பொழுது மாயாசத்தியானது தாயின் நிலையில் இருந்து அந்த ஜீவாத்மாவைப் பேணிவருகிறது. அப்படி ஜீவாத்மா பக்குவப்படுத்தும் நிலையில் இருக்கும் பொழுது மாயை மலம் எனலாகாது. இதை ஓர் உபமானத்தால் விளக்கலாம்.

தாயின் கர்ப்பத்தில் சிசுவானது உருவெடுக்கிறது. அப்படி உருவெடுத்து வரும் பொழுது தாயின் கர்ப்பம் போற்றுதற்குரிய துணையாகிறது. கர்ப்பத்தில் சிசு முற்றிலும் வளர்ச்சியடைந்த பிறகு அது அந்தக் கர்ப்பத்தில் நின்றும் விலகி வெளியே வரவேண்டும். அந்த வேளையில் வளர்ந்த கர்ப்பமானது சிசுவிற்கு மலமாக மாறுகிறது. அந்த மலத்தினின்று வெளியேறா விடத்து அழிந்து போகிறது. இதே விதத்தில் மாயை என்றும் பிரகிருதியாய் ஜீவாத்துமாவை வளர்த்துப் பக்குவப்படுத்துவதில் பரமாத்மாவிடம் ஒப்படைக்கிறது. ஜீவாத்மா பரமாத்மாவோடு சேரும் தருணத்தில் மாயை மலம் எனப்பெயர் பெறுகிறது.

ஆணவம் என்பதொரு மலம் இல்லை என்கின்ற சமயங்களும் உண்டு. ஆனால் உண்மையில் அஃது உள்ள தென்பதே சித்தாந்தம். இது உண்மையானது என்பது பற்றி பதியையும் பசுவையும் அறிந்த பின் பாசத்தையும் அறிய வேண்டுமென்று வற்புறுத்துகிறது சைவ சமயம். இதன் உண்மையை நன்கு அறிந்தால் வாழ்க்கையில் மனிதன் பிழைவிடமாட்டான். மனிதன் என கூறும் போது அவனிடம் இறை, உயிர்,



தளை என்பன உண்டு என்று முன்னரே கூறியுள்ளோம். இதுவே பாசந்தான் என் செய்யும் என்பவையும் அறிந்துள்ளோம். ஒருவாறு

ஸ்ரீ உமாபதி தேவ நாயனார் திருவருட்பயனில் என்ன சொல்லுகிறார்.

நெருங்கிய பிறப்பு இறப்பு ஆகிய துக்கத்தையும் பேரின்பம் ஆகிய வீட்டையும் எல்லாவற்றிற்கும் தாரகமாகயிருக்கப்பட்ட திருவருளையும் இல்லை என்று கூறுமாறு தன்னையும் மறைத்துக் கொண்டு நிற்கும் ஆணவமாமாம்.

இருள் நீங்கினால் பொருள் புலப்படும் பொருள் நீங்கினால் அருள் புலப்படும். அருள் புலப்பட்டால் பேரின்பம் உண்டாம். எனவே பேரின்பத்துக்குத் தடையாய் இருப்பது இருள் எனப்படுகின்ற மலமே ஆம். பாசம் என்று பொதுவாகக் கூறப்படுகிற சொல் ஐந்து வகைப் பாசங்களைக் குறிக்கும். அவை ஆணவம் – கன்மம் – மாயை – மயாகாரியம், திரோதா சத்தி என்பனவாம். இவற்றுள் திரோதானம் மறைத்தலைச் செய்யும் சத்தியாம். இது சிவசத்தியாம். இதனால் மற்ற நான்கு புலன்களும் காரியப்படும். திரோதான சத்தியின் இலக்கணம் அறியப் பெற்றால் எல்லாப் பாசங்களின் இலக்கணமும் அறியப் பெற்றதாகும் என்பர். திரோதான சத்தி என்பது உயிருக்குள் மறைந்து நின்று கன்மத்துக்கு ஏற்ப அதிகரிக்கும் சிவசத்தியாம். இது மலகாரணங்கள் கொண்டு உயிருக்குப் பந்தஞ் செய்யுமளவும் பாசம் எனப்படும். பந்த நீக்கத்தின் போது இதுவே அருட்சத்தியாம்.

இறைவன் உயிர்களை நற்கதியிற் செலுத்துதற்கு உலகெலாமாகியும் உடனாகியும் நிற்கிறான். அவ்வணம் நிற்கும் அவனது ஆற்றலே சத்தி – அருள் எனப்படும். இந்த அருளாற்றல் ஐந்து வகைப்படும். அவை பராசத்தி திரோதானசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி என்பனவாம், எல்லாவுயிர்கட்கும் கிருபைபுரியும் நோக்கமே பராசத்தி எனப்படும். திரோதானம் எனப்படுது உயிர்களிடம் உள்ள குற்றமாகிய மலம் பக்குவப்படுவதற்காக இறைவன் ஐந்தொழில் ஆற்றக் கருதுவதாகும். இந்த நிலை அவ்வுயிர்களின் கன்மங்கட்கு இயைய நின்று செலுத்தி போகங்களை விளைவிக்கும் தன்மையது. இது உயிர்களால் அறியப்படுவதில்லை. இதனாலே இதனை மறைப்புச் சத்தி என்பர். உயிர்கள் பக்குவம் அடைவதற்கு அனுபவம் வேண்டும். அந்த அனுபவம் வினைப்பயன்களைத் துய்ப்பதால் ஏற்படும். அப்படித் துய்க்கும் போது விஷயங்களில் உள்ள குணம் குற்றம் தெரியா

திருந்தால்தான் உயிர் துய்ப்பு அடையும். ஆதலால் உயிரறிவுக்கு ஒரு மறைப்புத் தேவையாக உள்ளது. இதுவே திரோதான நிலையாம் இந்த திரோதான சத்திதான் உயிர்கட்கு பக்குவம் வரச் செய்வதற்காக ஆணவம் எனப்படும் மலத்தின் வழியாய் உயிர்கட்கு மோகம் முதலியவற்றை விளைக்கும் சிவசங்கற்பத்துக்கு ஏதுவாகும். எனவே திரோதானந் தான் ஆணவமலத்தை காரியப்படுத்துகிற தெனத் தெரிதல் வேண்டும். இஃது அறிவுக்கு அறிவாய் நிற்கும். இறை செயலாம். இதனை நாம் அறிவதில்லை. மாயையும் கன்மங்களும் இந்த திரோதான சத்திக்கு கருவியாகி அதனுள் அடங்கும் இயல்பினவாகும். ஆகவே மாயை கன்மங்கள் இம்மறைத்தற் சத்திக்கு கருவியாய் நிற்பனவாம் எனத் தெரியலாம். நம்முடைய இந்திரியங்களும் கரணங்களும் தத்தமக்குரிய விஷயங்களிற் சென்று இன்னது என அளவிட்டு அறியும். ஆனால் அப்படி அறிகின்ற தன்மையும் தம்மோடு மறைந்து உடனாய் நிற்பதும் செலுத்துவதுமான ஆன்மாவையும் அறியமாட்டா. இப்படித் தான் முதல்வனுடைய சிற்சத்தியின் திரோதான சத்தியானது உடன் நின்று வினைப்பயன்களை அனுபவிக்கச் செய்யினும் ஆன்மாக்கள் தம்மையும் இச்சத்தியையும் அறிய மாட்டாவாம். ஆனால் அதுவே அருட்சத்தியாக மாறியதும் ஆன்மாக்கள் மேலவற்றை அறிகின்றன. எனவே ஆன்மாக்கட்கு இறைவனை அறிய மாட்டாத நிலையும் இறைவனை அவன் அறிவிக்க அறியும் நிலையும் என இரண்டு நிலைகள் உள என்று நாம் தெரிந்தோம். இவற்றுள் பாச நிலையானது அறிய மாட்டா நிலையாம்.

புறப்புறச் சமயம் – புறச்சமயம் – அகப்புறச் சமயம் என்ற இவற்றின் உட்பிரிவுகளாகிய பதினெட்டு வகையான கொள்கையினரும் உயிர்கட்கு மூலமலம் உண்டு என்பதை ஒப்புக் கொள்ளார். அகச் சமயத்தவர் அறுவரும் சித்தாந்தச் சைவரும் ஆக ஏழு திறத்தினரே ஆணவ மலத்தின் உண்மை கூறுவர். பூத இருள் கண்ணை மறைப்பது போல இவ்வாணவ மலம் ஆன்மாவின் அறிவை மறைக்கின்றது என்பது தெளிவாம்.

ஆணவம் என்பதொரு பாசப்பொருள் உண்டு இஃது ஒன்றில்லையானால் இன்ப துன்ப அனுபவமே பிறக்கமாட்டாது. ஆணவம் இருளிலும் கொடியாது. தானொரு பொருள் இருத்தலையே நமக்குக் காட்டுவதில்லை. காரண நிலையில் ஆணவமலம் ஒன்றேயாம் காரிய நிலையில் பல சத்திகளை உடையதாம். ஆணவம் அநாதி முதலே உயிரின் அறிவளவிலே சம வியாபகமாகக் கலந்திருந்து மறைப்பதாகும். ஆணவமலம் கொடியது. இஃதொன்று நம்மை அறிய வொட்டாமல்



நம்மிடம் இருக்கிறதென்பதே பலருக்குப் புலப்படுவதில்லை. ஆணவமலமே நம்மை உண்மைப் பொருளையும் நன்மார்க்கங்ளையும் அறிய விடாமல் தடுக்கிறது. ஆணவம் உயிரின் குற்றமாம், குணமன்று. அதனால் நீங்கும் தன்மையதாம். ஆணவமலம் என்பது அநாதியான சகஜமலம் அநாதி என்பதை அறியப்படாதது ஆதி என்பது அறியப்படக் கூடியது. ஆகந்துகம் மாயாமல கன்மமலங்கள் மா ஆம். அநாதியாக மலமாக ஆணவமிருப்பினும் ஆகந்துகமல அநுபவத்தால் நீங்கும் பெற்றியதாகும். மாயையானது கன்மத்துக்கேற்றாற் போல அவரவர்க்கு விரிந்து துணைபுரியும். சிவஞான மென்ற போராளி உதயமானால் தான் ஆணவப் பேரிருள் முற்றும் நீங்கும். இதற்குச் சிவனருளே தேவை. ஆகையால் சிவனை மறவாதிருத்தல் நல்லது. திருவருளும் நமக்கு இன்றியமையாதது.

இவ்வுலக வாழ்க்கைக்கு பொருள் முக்கியம் அப்படியே அவ்வுலக வாழ்வுக்கு அருள் முக்கியமாகும். திருவருள் என்பது பிரான்தன் கருணையே. அது கதிரோன் ஒளி போல் எங்கும் என்றும் வியாபித்திருப்பது. திருவருளே எதனையும் செய்விப்பது திருவருளை நம்பிக்கிடந்தால் கவலை போம். இந்திரிய அறிவு கொண்டு திருவருளை அறிவதற்கில்லை. தரை எவற்றையும் தாங்கி நிற்பது போலவே திருவருளே யாவற்றையும் யாவரையும் தாங்கி நடத்துவது. திருவருளை அறியாவதர் தற்கேடர் ஆவர். திருவருளை எங்கேயோ சென்று தேட வேண்டியதில்லை. நாம் திருவருள் எல்லையுள்ளே தான் எப்போதும் உள்ளோம். சிற்றின்பத்திலே மனம் செல்லுமளவும் திருவருளை அறியப்பெறாது திருவருட்பேறு எய்தாதார் வீடு பேறு எய்தார் என்பது நிச்சயம்.

சகலராகிய நமக்கு நம்மைப் போலவே மானிடச் சட்டை யுளடங்கி நின்று அருள் செய்யும் எப்படிப்பரமம் அருள் புரியாவிட்டால் வீடு பேறு என்பதை இப்படிப்பட்டவரும் அறிந்து அடைய இயலாது. சூரிய காந்தக்கல் சூரியன் எதிர்ப்பட்டால் அக்கினி வெளிப்படுத்திப் பஞ்சை எரிக்கிறது. இவ்வாறே சற்குரு சந்நிதானம் நமக்கு வாய்த்தால் நாமும் நம் பல இருள் நீக்கப் பெறுவோம்.

இவ்வாறு அருளது நிலை, அருளுரு நிலை, அறியும் நெறி உயிர் விளக்கம் இன்புறுநிலை ஐந்தெழுத்தருள்நிலை, அணைந்தோர் தன்மை, என்னும் தலையங்களைக் கூறி விளக்கியுள்ளார். இந்தத் தலையங்கள் வேறாய் இருந்தாலும் பதி, பசு, பாசம் (இறை, உயிர், தளை) என்பன இணைந்து கொண்டே இருப்பகைக் காணலாம்.

தொன்மையாயுள்ள முப்பொருள்களுள் வைத்து மூன்றாவதாக எண்ணப்படும் தளை மூன்றனுள் பண்டேபுல்லிய இருள் மலம் ஒன்றே அறிவை மறைத்து அறியாமையைச் செய்கின்றமையின் இருண் மலமெனப் பெயரால் குறிக்கப்படுகிறது.

*"நண்ணிய பாசத்தில் நானெனல் ஆணவம்*
*பண்ணிய மாயையில் ஊட்டற் பரிந்தனன்*
*கண்ணிய சேதனன் கண் வந்த பேருள்*
*அண்ணல் அடிசேர் உபாயம் தாகுமே" (2421ம் பா)*

*திருமந்திரம்*

அதாவது :- பொருந்திய பாசமாகிய மாயையில் தனுகரணங்களோடு கூடி அவைகளே தான் என மயங்கியிருத்தல் ஆணவமாகும். அவ்விதமாக மயக்கங் கெடவே இறைவன் ஆன்மாக்களை மாயையோடு பொருந்தி வைத்தனன் ஆணவ வலிகுன்ற வறிவுடைய ஆன்மாவின் கண் புலப்பட்ட நாத சத்தியே சிவபெருமானது திருவடிகளை அடைவதற்குரிய உபாயமாகும் பாசம் = தளை.

*திருச்சிற்றம்பலம்*



# அருளது நிலை

உயிர்கள் அநாதியே தொடங்கி இன்றுவரை எத்தனையோ பிறப்புக்களையும், இறப்புக்களையும் அடைந்து நிற்கின்றன. ஒவ்வொரு பிறப்பிலும் எத்தனையோ துன்பங்களை அனுபவிக்கின்றன. "எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்" நாம் கேட்ட வாக்கு. "அன்னை எத்தனை எத்தனை அன்னையோ" "வினைப்போகமே உறும் தேகங்கண்டாய், தந்தையார் போயினார் தாயாரும் போயினார் தாமும் போவார் இந்த மேற்கோளினால் பிறப்பும் இறப்பும் நிட்சயமானது எனக் கண்டோம்.

ஆதலால் நாம் நிலைமையிலாப் போகங்களைத் துறந்து நிலையுடையானாகிய சிவத்தைப் பற்றுதல் வேண்டும். "இப்பிறவி தப்பினால் என்பிறவி வாய்க்குமோ" என அஞ்சி அருளது நிலையைக் கடைப்பிடிக்க வேண்டும்.

*"பிறப்பினி பிஞ்ஞகன் பேரரு ளாளன்*
*இறப்பிலி யாவர்க்கும் இன்பம் அருளும்*
*துறப்பிலி தன்னைத் தொழுமின் தொழுதால்*
*மறப்பிலி மாயா விருத்தமும் ஆமே –* திருமந்திரம், கடவுள் வாழ்த்து 25ஆவது

என்கிறார் திருமூலநாயனார்.

முன்னம் ஈட்டிய தவத்தினாலே இறை அருள் உருவாய் வந்து கூடும். ஆகவே அருளது நிலையையும் சிறிது உணர்வோம்.

பதி, பசு, பாசம் (இறை, உயிர், தளை) இவைகளின் இயல்புகளையும் அவற்றின் ஆதியாய் உள்ள இறைவனை அடைய வேண்டிய விதிகளையும் முறைகளின் தன்மைகளையும் அறிந்தோம். இவை எல்லாவற்றிற்கும் மேலாக உள்ள அருளையிட்டு அறிய வேண்டும்.

தளையாகிய இளையைப் போக்கி இறையை அடைய வழிகாணவேண்டும். இல்லையாயின் இளை பாவாகி நூலாகி சீலையாகி விடும் பின்னர் பேரறிவு தான் வேண்டும். அது தான் சிவஞானம் எனப்படுவது. சிவனது கருணையே. கன்றினால் கொள்வதறிவு. ஆவின் மடியில் பாலிருப்பினும் ஆவின்கன்றுதான் கறக்க உதவ வேண்டும் சிவனுக்குக் கிட்டும் வழி கன்று என்னும் அருளே.

கதிரவன் கதிரே இருளைப் போக்கும் வழியாகும், அதே போல் செல்வம் ஞானம், பெருமை, சிறுமை முதலியன யாவும் அருளால் விளையும் வழியாகும்.

*"பிராணருள் உண்டெனில் உண்டுநற் செல்வம்*
*பிரான் அருள் உண்டெனில் உண்டுநல் ஞானம்*
*பிரானருளிற் பெருந்தன்மையும் உண்டு*
*பிரானருளிற் பெரு தெய்வமு மாமே"* — 1645, திரு மந்திரம்

*"சிவனருளாற் சிலர் தேவருமாவர்*
*சிவனருளாற் சிலர் தெய்வத்தோ டொப்பர்*
*சிவனருளால் வினை சேரஇலாமை*
*சிவனருள் கூடின் அச் சிவலோகமாமே"* — 1649, திருமந்திரம் கூற்று.

இதையே மையமாக திருவள்ளுவனாயனாரும்,
*"அருளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை பொருளில்லார்க்கு*
*இவ்வுலகம் இல்லாதுயாங்கு....* — 247.
எனக் கூறுகிறார்.

இவ்வாறு அருளை வலியுறுத்துகிறவர்களையும் நாம் பின்பற்ற வேண்டும். இவற்றினால் இறைவனையடைய முடியும். வினையினாலே தான் இருள் வரும், வினை சஞ்சிதம், பிராரத்துவம், ஆகாமியம் என மூன்றுவகைப்படும். செய்யும் வினைகள் யாவும் ஆகாமியம் என்றும் பெயர் பெறும். இதுவே தன்காரிய வினை. சிலருக்கு வினையின் பயன் உடனே வந்து விடும். சிலருக்கு பின் வரும். அரசன் அன்ரறுப்பான் அரன் நின்ரறுப்பான் என்பது பழையோர் வாக்கு பிராரத்துவமாகும். பிறப்புக்கு தக்கதாகும். இதையுன்னியே இலகுவாக எல்லாம் அவன் செயல் என்று முடிக்கிறோம்.

நின்ரறுக்கும் போது வினைசேமிக்கப்படும் சேமிப்பது சஞ்சிதம் எனப்படும். சஞ்சிதம் கட்டுப்படவும் பிராரத்துவம் புசிக்கப்படவும். ஆகாமியம் ஆறுதலடையவும் இருக்கும் போது அருளானது மிகுந்த பிரகாசமாய் எவ்விடத்தும் சூரியனைப் போல உதவி செய்து நிற்கும். வினை அனுபவத்தினாலேதான் மனம் சுத்தப்படும் செயற்படாதவினைக்கு அனுபவம் என்பது இல்லை. ஆகவே அனுபவமுண்டாவதற்கு வினை செய்தல் வேண்டும். இதுவும் உள்ளிருக்கும் இறைவனாலே. இக்கருத்துப்பற்றியே "அவனன்றி அணுவும் அசையாது" என்கிறோம்.



*"வித்தகன் நந்தி விதிவழி யல்லது*
*தத்துவ ஞானிகள் தன்மை குன்றாரே*
*கோன்முன்னம் சென்னி குறிவழியே சென்று*
*நான்முன்னம் செய்ததே நன்னிலம் ஆனதே"*

இதனால் நம் அனுபவத்திற்கு இறை அருள் தேவை என்பது பெறப்பட்டது. இவ்வாறு வினையை அனுபவிக்கச் செய்தற்கு மட்டுந்தான் திருவருள் உதவுகின்றதென்பதொன்றில்லை. வினையை நீக்குவதற்கும் இறையருள் தான் உதவுகிறது.

புசிப்பு வினையின் இன்ப துன்பம் தோன்றாது உடலூழாக் கழியவும் தீட்சை ஆதிகளால் சஞ்சிதமும், ஆகாமியமும் கெடவும் குருவாகி அருளுவதும் சிவமே. ஆதலால் நமது பக்குவமுற்ற பருவத்தே வினை நீக்கமாதற்கும் அவன் அருளே பயன்படுகின்றமை தெரியலாம்.

பாற்கடலிலே திரிகிற மீனானது அந்தப் பாலைக் குடித்துப் பசி தீராமல் கீழ்மையான பிராணிகளைப் புசித்து பசி தீர்வது போல உயிர்களும் அருள் எல்லைக்குள் வினையின் மறைப்பால் நின்று பேரின்பத்தை நுகரப் பெறாமல் பஞ்சேந்திரிய இன்பங்களையே பெரிதென மதித்து நிற்கும் இது பற்றியே,

*"பால்ஆழி மீன் ஆளும் பான்மைத்தே அருள் (உயிர்கள்)*
*மால்ஆழி ஆளும் மறித்து"* என்றார். திருவருட்பயன் 34ம் செய்யுள்

தளை ஆகிய கட்டு நம் வாழ்க்கையில் தடுமாற்றத்தையும், பெருமையையும் கொண்டு வந்து சேர்த்து நான், தான் என்ற ஆணவத்தின் உள்ளுறைச் சொற்களைச் சேர்க்கிறது. இதைத் திருமூலர் கீழ்வருமாறு கூறுகிறார்.

*நானென்றுந் தானென்றும் நாடிநாள் சாரவே*
*தானென்று நானென் றிரண்டிலாத் தற்பதஞ்*
*தானென்று நானென்ற தத்துவ பிரல்கலால்*
*தானென்று பிரானென்றுஞ் சாற்றகில்லேனே* — 1441.

ஆணவத்தின் அளவினை அளக்கமுடியாது. ஆன்மாவை மறைத்து புத்தியை மழுங்கவைத்து தானே முந்திவரச் செய்யும். ஆன்மாவின் அறியாமையாகிய மலமறைப்பே அரனை அணுகவிடாமல் தடுப்பது,

*"வெள்ளத்துள் நாவற்றி எங்கும் விடிந்திருளாம்*
*கள்ளத்து இறைவர் கடன்"* திருவருட்பயன் 38ம் செய்யுள்

கழுத்தளவு தண்ணீரிலே நின்று கொண்டிருக்கையிலும் ஒருவன் நாக்குத் தாகத்தால் வறள விட்டிருத்தல் அவனது அறிவு பறிபோகிய தன்மையாலாகும். இதுவும் விதிப்பயனே என்போம். சூழ எப்புறமும் விடிந்து இருள் மூழ்கி இருக்கும் ஒருவன் இருளாய்க் காண்டல் அவனது பார்வையறிவேயான இயல்பு. இதுவே மாலை இதனை ஆன்மா திருவருளை அறியாதிருத்தலால் உண்டானது என்போம்.

அஞ்ஞானம், அதாவது மாயையால் மூடப்பட்டு இருக்கும் ஆன்மாவானது முன்னம் செய்த வினைப்பயனை அனுபவிக்க வேண்டிய காலம் வந்து அணுகும்போது பின்வருமாறு இருக்கும்.

*"பரப்பு அமைந்து கேண்ம இனிது; பாற்கலன் மேல் பூனை*
*கரப்பு அருந்த நாடும் கடன்"* *39ம்*

அருட் செயலைக் கேட்குமிடத்து கரண வியாத்திகளை விட்டு இன்பமடையும் முறை. உறியின் கண் அமைந்த பாற் சட்டியின் மேல் இருக்கும் பூனையானது இருந்தபடியே பாலைப் பருகிப் பசி தீராமல் சுவரின் மீது ஊர்ந்துவரும் கரப்பான் பூச்சியைத் தாவிப் பற்றிப் பிடித்து உண்டு பசி தீரமுயலுவதை நிகர்க்கும். ஆன்மா திருவருள் எல்லையுள்ளே இருந்தாலும் ஆதனை எண்ணாமல் சிந்திரிய விஷயபோக நாடும் எண்ணங்கள் இருக்குமாயின் திருவருளுக்கு இலக்காக,

ஒவ்வொரு பொருளிலும் பௌதீகம், தெய்வீகம், ஆன்மீகம் என மூன்று நிலை உண்டு. இவை முறையே உடல், மந்திரம், தெய்வசக்தி என்று கூறப்படும். உடல் பூதகாரியமாம். மந்திரம் தெய்வ சம்பந்தமுடையது. தெய்வத் தன்மை சிவசக்தி காரியமாம். எனவே ஆன்மீகமான தெய்வ சக்தியே மந்திர பாவனையால் பௌதிகத்தினிடமாக நின்று பயன்படுவதாம். உதாரணமாக பாம்பு கடித்த ஒருவனுக்கு வெறும் பௌதிக கீரியைக் கொண்டு வந்து தடவுவதால் விடம் நீங்குவதில்லை. அதற்குப் பதிலாக சுத்த மனத்தால் மந்திரத்தைப் பாவிக்கும் ஆற்றல் உடையவன. ஒருவன் வந்து மந்திரரூபமேதானாக மந்திரமெனவும் தானென்றும் பேதமின்றித் தன் அறிவு மந்திரத்தின் வசமாய் உறைத்து நிற்க அம்மந்திரக் கண்ணால் பார்த்தால் விடம் இறங்கி விடும். மந்திரத்தைக் கணிப்பவன் சார்ந்த பொருளின் வண்ணமாகிற படிவம் போன்று மந்திர சொரூபியாகி விடுகிறான். அப்போது அம்மந்திரத்தினிடமாக நின்று பயனளிக்கும் சிவ சக்தியினது ஆற்றல் அவ்விடத்தை இறக்கி விடுகிறது. அதுபோல் ஞானாசாரியன் தன் மாணாக்கனை ஞானக்கண்ணால் பார்த்து அருள் பாலிக்கிறான். சூரியனின் முற்பட்ட இரவும் பனியும் இருளும் நீங்குவன போலச் சீடனிடம் உள்ள மலம். மாயை கன்மங்கள் நீங்கி விடும். கீரி இருந்தும் கீரி மந்திரத்தின் தரிசன மின்றேல் விடம் நீங்காமை போலவே அருள் இருந்தும் அருளுருவாம் ஆசானின் காட்சியின்றேல் ஆன்மாவின் மல இருள் நீங்காது.

*திருச்சிற்றம்பலம்*

*அவனன்றி அணுவும் அசையாது*



# பஞ்சாக்கர நடனம்

பஞ்சாக்கர நடனம் உண்மை விளக்கம் கூறுவதென்ன

*எட்டும் இரண்டும் உருவான லிங்கத்தே*
*நட்டம் புதல்வன் கவிலக்கேள் – சிட்டன்*
*சிவாய நம வென்று திருவெழுத்தஞ் சாலே*
*அவாயமற நின்றாடுவான்.*

*31ம் பா*

எட்டும் இரண்டும் உருவாயிருக்கிற யகாரமாகிய ஆன்மாவிடத்திலே நடனம் பரமசிவன் பஞ்சாக்கரமே திருமேனியாகக் கொண்டு ஆன்மாக்கள் பிறவியறத் தக்கதாக நிருத்தஞ் செய்வாள்.

*ஆடும் படிகேள அம்பலத்தான் ஐயனே*
*நாடும் திருவடியிலே நகரம் – கூடும்*
*மகரம் உதரம் வளர்தோள் சிகரம்*
*பகருமுகம் வாமுடியப் பார்.* *32ம் பா*

உன்னரிய ஸ்ரீ பாதத்திலே நகாரமாகம, பொருத்தப்பட்ட திருவுந்தியிலே மகாரமாகவும், மிகுந்து வளரப்படா நின்ற திருத்தோளிலே சிகாரமாகவும் சொல்லப்பட்ட திருமுகத்திலே வகாரமாகவும் திருமுடியிலே யகாரமாகவும் இந்த முறைமையினாலே நமசிவாய என்கிற பஞ்சாக்கரமே திருமேனியாய்க் கொண்டு நிருத்தஞ் செய்வார். (நமசிவாய)

*சேர்க்கும் துடிசிகரம் சிக்கனவா வீசுகரம்*
*ஆர்க்கும் யகரம் அபயகரம் – பார்க்கலிறைக்*
*கங்கி நகரம் அடிக்கீழ் முயலகனார்*
*தங்கும் மகரமது தான்.*

டமருகம் ஏந்திய ஸ்ரீ அத்தத்திலே சிகாரமாகவும், வீசிய ஸ்ரீ அந்தத்திலே வாகராமாகவும் அமைந்த ஸ்ரீ அத்தத்தில் யகாரமாகவும் அக்கினி ஏந்திய ஸ்ரீ அந்தத்திலே பஞ்சாக்கரமே நகாரமாகவும் முயலகனை மிதித்த பாதத்திலே மகாரமாகவும் இந்த முறைமையிலே பஞ்சாக்கரமே திருமேனியாகக் கொண்டு நிருத்தஞ் செய்வார். (சிவாயநம)

*ஓங்கார மேநல் திருவாசி உற்றதனில்*
*நீங்கா எழுத்தே நிறைசுடராம் – ஆங்காரம்*
*அற்றார் அறிவர் அணி அம்பலத்தான் ஆடலிது*
*பெற்றார் பிறப்பற்றார்பின்*

*34ம்*

பிரணவந்தானே நல்ல திருவாசியாவம் பிரணவத்தை விட்டு நீங்காத பஞ்சாக்கரமே உள்ளொளியாகவும் யான் எனது என்றும் செருக்கற்றவர்கள் அறிவார்கள். அழகிய திருவம்பலத்தின் கண்ணே எழுந்தருளி நின்று நிருத்தஞ் செய்யும் முறைமையை தரிசித்தவர்களே பின்பு சனன மரணம் அற்றவர்களாவார்.

*தோற்றம் துடியதனில் தோயும் திதி அமைப்பில்*
*சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் – ஊற்றமா*
*ஊன்று மலர்ப்பதத்தில் உற்ற திரோ தம்முத்தி*
*நாற்ற மலர்ப்பாதத்தே நாடு.*

*35ம்பா*

டமருகம் ஏந்திய ஸ்ரீ அத்தத்திலே சிருட்டியாகவும் அமைந்த ஸ்ரீ அத்தத்தில் ஆன்மா இரட்சையாகவும் அக்கினி ஏந்திய ஸ்ரீ அந்தத்திலே மலசங்காரமாகவும் உறுதியாய் ஊன்றிய ஸ்ரீ பாதத்திலே பிரபஞ்சத்தை மறைக்கும் திரோதமாகவும் தூக்கிய ஸ்ரீ பாதத்தில் அநுக்கிரக முத்தியாகவும் இந்த முறைமையிலே முத்தி பஞ்ச கிருத்தியமே திருக்கூத்து ஆகும்.

*மாயை தளை உதறி வல்வினையைச் சுட்டுமலம்*
*சாய அமுக்கி அருள் தானெடுத்து – நேயத்தால்*
*ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தானமுத்தல்*
*தானெந்தை யார்பாதம் தான்.*

டமருகம் ஏந்திய ஸ்ரீ அத்தத்தினாலே மாயையை நீக்கி அக்னி ஏந்திய ஸ்ரீ அத்தத்தினாலே கன்ம மலத்தைச் சுட்டு ஊன்றிய ஸ்ரீ பாதத்தினாலே மலம் மேலிடலாம் அமிழ்த்தி, தூக்கிய பாதத்தினால் அருளே தனுவாக நிறுத்தி கிருபையினாலே அமைத்த ஸ்ரீ அத்தத்தினாலே ஆனந்த வெள்ளத்திலே ஆன்மாவை அழுத்துகிறதுதான் எம்முடைய சுவாமியாகிய பரமேஸ்வரனுடைய திருக்கூத்து முடியும்.



*மோனந்த மாமுனிவர் மும்மலத்தை மோசித்துத்*
*தானந்த மானிடத்தே தங்கியிடும் – ஆனந்தம்*
*மொண்டருந்தி நின்றாடல் காணும் அருள் மூர்த்தியாக்*
*கொண்டதிரு அம்பலத்தான் கூத்து.*

மௌனஞானிகள் கர்த்தாவினுடைய கிருபையினாலே மூன்று மலங்களையும் நீக்கி ஆன்மபோதம் முடிகின்ற இடத்திலே உதயமாகிற ஆனந்த வெள்ளத்திலே முகந்து கொண்டு அனுபவிக்கிறதான் ஆன்மாக்களை இரட்சிக்க வேண்டுமென்ற காருண்ணியமே திருமேனியாகக் கொண்டு திருவம்பலத்தின் கண் எழுந்தருளி நின்று நிருத்தம் செய்கின்ற முறைமையாகும்.

உரையுணர்வு கெட்டா ஒருவன் மிரு பஞ்சாக்
கரத்தால் வரைமகள்தான் பாதி – பரைமிடமாய்க்
காணும்படியே கருணையுருக் கொண்டாடல்
பேணுமவர்க் குண்டோ பிறப்பு.

*உண்மை விளக்கம் 8ம் பா*

மனம், வாக்கு, காயங்களுக்கெட்டாத ஒப்பற்ற பரமேஸ்வரன் பஞ்சாக்கரத்தினாலே மிகுந்த காருண்ணியமே திருமேனியாகக் கொண்டு பராசக்தியாகிய திருவலம் இடமாய் நின்று பாதியாகிய மலையரன் மகள் காணும்படிக்கு கிருபையினாலே திருவருள் கொண்டெழுந்தருளி ஆடியருளிய திருக்கூத்தை விரும்பின பெயர்கள் பின்பு சனனமற்றவர்கள் என்க.

*ஊன நடனம் ஒருபால் ஒருபாலா(கு)*
*ஞான நடனம் தான் நடவேநாடு*

*திருச்சிற்றம்பலம்*

*சிவ சிவ*

## சிவயோக சுவாமிகளின் சைவசித்தாந்தம்

யோகசுவாமிகளின் சைவசித்தாந்தத்தை விரிக்க வேண்டியதில்லை. பின்வரும் அவரது எண்ண ஊஞ்சல் உலகில் எப்படி இருந்தது என்பதைக் காட்டும் திருப்பள்ளியெழுச்சி.

இஃது ஈழத்துச் சிவயோக சுவாமிகள் ஏற்றிய ஞானவிளக்கு என்னும் நூலில் உள்ளது.

"சுவாமிகள் புறப்பூசை அகப்பூசையாகிய இருவகைப் பூசைகளையும் வற்புறுத்தியுள்ளார். புறப்பூசை வழிபாடு நாளடைவில் முதிர்ந்து அகப்பூசை வழிபாடாகும்." புறத்தே வைத்து வழிபட்ட இறையை உள்ளக்கிழியில் உயிர் ஓவியமாய் எழுதிப் பார்த்திருக்கும் நிலை நாளடைவிற்கே கூடும். அதுவே தியானமாகும். தியானநிலையில் இறைவன் அகத்தியாகின்றான்.

*(பக்கம் 45)*

*ஆக்கியோன்* வித்துவான் க. ந. வேலன்.

### திருப்பள்ளியெழுச்சி

*அன்னைத் தந்தையார் மைந்தர்கள் ஒருபால்*
*அருமைசேர் சோதரர் உறவினர் ஒருபால்*
*பொன்னணி சிறுமியர் சிறுவர்கள் ஒருபால்*
*புகழ்பவர் இகழ்பவர் போபவர் ஒருபால்*
*சென்னியிலஞ்சி கூப்பினர் ஒருபால்*
*தேசத்தில் திரிந்து இரப்பவர் ஒருபால்*
*கண்ணிணை கண்டு களிக்கச் செய் பரனே*
*கடவுளே யென்னுள்ளம் எழுந்தருளாயே.*

*வேதமந் திரஞ் சொல்லும் வேதியர் ஒருபால்*
*வேள்விகள் செய்ய விழைபவர் ஒருபால்*
*பூதபௌ திகங்களை ஆய்பவர் ஒருபால்*
*புகைவண்டியமைக்கும் பொறிப்பினர் ஒருபால்*
*கீதத்தைப் பரவச் செய் யாழினர் ஒருபால்*
*கேட்டு மகிழ்ந்திருக்கும் கிழவர்கள் ஒருபால்*
*ஈதனைத்துஞ் செய்துஞ் செய்யாம லிருக்கும்*
*இறைவனே யென்னுள்ளம் எழுந்தருளாயே.*

சிவயோக சுவாமிகள்

*சிவ சிவ*



# முடிந்த முடிபு

முன்சொன்னவைகளிலிருந்து நாம் எடுத்துக்கொள்ள வேண்டியதுதான் என்ன? ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மல நீக்கத்தைச் செய்ய சிவதீக்கை பெற்றுச் சரியை, கிரியை, யோகம் என்னும் மூன்றுபாதப் பொருள்களை விளக்கும் போது உண்டான அறிவைப் பெற்று செல்வ நிலையாமை, இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை முதலியவைகளையும் உணர்ந்து பிறவிக்கு அஞ்சி, வீடுபேற்றில் அவாமிக்குடையார்க்கு தக்க பொருளாகிய பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள்களின் உண்மைகளையும் அவைகளின் இலக்கணங்களையும் அறிந்து அதனால் இன்பமே வடிவமான இறைவன் இயல்பையும், எல்லா அனர்த்தங்கட்கும் காரணமான ஆணவத்மின் வலிமைமையையும் உணர்ந்தபின் மலநீக்கத்துக்குரிய சாதனைகளை மேற்கொள்ளுதற்கு உரிமையுடையது ஆன்மாவேயென்று தெரிந்துணர்ந்து ஞானமே பரம சாதனமென விளங்கி நிற்பதே.

பிறப்பில் தவவொழுக்கத்தை காட்டி அவ்வொழுக்க நெறியின்கண் நிற்கும் தகுதியைப் பிறப்பித்து சிவதீக்கையைப் போதித்து அங்ஙனம் மலநீக்கத்தைச் செய்யும். சிவதீக்கைகளைப் சகல வர்க்கத்துக்கும் குருவடிவில் நின்று செய்தருள் செய்பவர். மலத்தொடக்கில்லாத "இறைவனே".

ஆன்மாவின் அறிவு சத்து, அசத்து என்னும் இரண்டினுள் பாசமாகிய அசத்தால் விளங்கி அசத்தின் பாலுளதாய் அவ்வசத்தினை அறிந்து அதன் வசமாக அப்பாசரூபமாகவே தன்னையெண்ணித் தன்இயல்பை அறியாது தனது இன்பு நிலையை இழந்து நின்கும் தன்மையையும் அந்நிலையில் நீங்கிச் சத்தாகிய சிவத்தினால் விளங்கி அதன்கண்ணே நிலைபெற்று நின்று அதனையே அறிந்து நிற்கும் தன்மையும் காணுமுறையாகிய ஆன்ம தரிசனத்தையும் ஆசாரியன் உபதேசித்த பொருளைச் சித்தத்தினால் வரும் ஆன்ம சுத்தியைப்பெறும்.

பாச, பசு ஞானங்களால் இறைவனைக் காணமுடியாதெனவும், சிவஞானமே கண்ணாக காண்டல் கூடுமெனவும் முத்தி பஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரித்தல், பழையவாசனை தாக்காதிருத்தற்கு வாயில் எனவும், பெத்தநிலையில் அந்தச் சிவன் உயிரேயாகி ஒற்றுமைப்பட்டு நின்றது போல இச்சாதன நிலையிலும் உயிர் அச்சிவனோடு ஒற்றுமைப்பட்டு அச்சிவப்பணியில் வழுவாது நிற்கவேண்டும் எனவும் அதனால் மலம், மாயை, கன்மம், நீங்குமெனவும், தன்பணியிலே நிற்றலும் இறைபணியிலே நிற்றலும் சாதனமெனவும் கண்ணுக்கு ஒரு பொருளைக்காட்டி தானும் அப்பொருளைக் காணும்

உயிர்போல உயிருக்கு ஒரு பொருளைக் காட்டிச் சிவபெருமானும் கலந்து நின்று அறிந்து நிற்கும் அத்துவிதக்கலப்பை மறவாமல் கடைப்பிடித்தல் வேண்டும் எனவும் அங்ஙனம் ஞானநிட்டை கைவரும் போது அறிவிச்சை செயல்கள் புறத்தே செல்லுமாயின் திருவேடத்தையும் சிவாலயத்தையும் சிவனெனக் கண்டு வழிபடுக எனவும் சைவசித்தாந்தம் கூறும்.

இனிநாம் தளை, பாசம், கட்டு என்றும் ஒரு பொருட் சொற்களையுடைய பாசத்தை பார்த்தால் சிவபெருமானே முழுமுதற் கடவுள் என்றும் உலகத்துக்குக் கருத்தா என்றும் அவருக்கு பரத்துவங் கூறிக் கொடுத்து வணங்கி அருள் பெறும் சமயம் சைவசமயமாம் தத்துவம் என்பது உள் பொருள். அது எப்பவோ முடிந்த காரியமான பொருள். சைவசித்தாந்தம் என்பது சிவசம்பந்தமான முடிந்தமுடிபு. சைவசித்தாந்தம் என்பதை திருமூலநாயனார் 1500 ஆண்டுகளுக்கு முன்பே ஆண்டுள்ளார்கள் என்று முன்னர் கூறினோம். சிலபெரியோர் இதனை வேதாந்தத் தெளிவாம் சைவசித்தாந்தம் எனப் போற்றுகிறார்கள். இது சிவநெறி சார்பான நுட்பமான முடிபாகும். இது சைவசமயத்தவரின் கோட்பாடுக்கு அமையக் கடவுள், உயிர், உலகம் என்னும் மூன்றையும் முறையாக அடக்குவது.

சைவர் என்போர் நித்திய அநுட்டானம், சிவபூசை, சிவாலய வழிபாடு, சைவாசார, திருநீறு, திருவைந்தெழுத்து இவற்றை உடையவர்கள் சைவாசாரம் ஆகமங்கள், பத்தாதிகள், திருமுறைகள், மெய்கண்ட சாஸ்திர நூல்கள், பண்டார சாஸ்திரங்கள் முதலியவற்றில் வெளியாகியுள்ளது. அவை சைவத்திறன் எனப் போற்றப் பெறுபவை.

சைவசித்தாந்தம் முப்பொருள்கள் கடவுள், உயிர், உலகம், இறை, உயிர், தளை, பதி, பசு, பாசம் எனப் பலவகைப் பெயர்களால் பகுக்கப் பெற்றுள்ளன. எனவே இவற்றைச் சத்துப் பொருள்கள் என்பர். இவைகளை வெவ்வேறு இயல்புள்ளவைகளாக சிவசதசத்து, சதசத்து, சடசத்து என்னும் பெயரோடு பலவகையாக சாஸ்திரங்கள் விரித்துக் கூறும். இவற்றை விட கடா விடைகளால் சைவசித்தாந்தக் கருத்துக்களை விரித்துக் கூறும் பெரியோர்களும் இருந்திருக்கிறார்கள்.

இக்காலக் கட்டத்தில் விஞ்ஞானம் இடையில் புகுந்து சித்தாந்தக் கருத்துக்களை மாற்றவும் மறைக்கவும் முயல்கின்றன ஆனால் அம்முயற்சி முயற் கொம்பாகும் என்பது முடிந்த முடிபாகும். அணுவை அறிந்த விஞ்ஞானி அருள் நிறைந்த இறையை மறவான்.



மனிதப்பிறப்பை எடுத்த ஆன்மாக்களுக்கு எப்பொழுது முத்தி சித்திக்கும் அவர்கள் தங்கள் தங்கள் பக்குவத்துக்கேற்ப படிமுறையில் பிறவி தோறும் புறச்சமயங்களில் ஏறி ஏறி அவ்வச் சமயத்துக்குரிய நூல்களில் விதிக்கப்பட்ட புண்ணியங்களைச் செய்து அப்புண்ணிய மேலீட்டினாலே பின்பு சைவசமயத்தை அடைந்து சிவாகமத்தில் விதிக்கப்பட்ட சரியை, கிரியை, யோகங்களை விதிப்படி மெய்யன்போடு அனுட்டித்து சிவபெருமான் ஞானசாரியாராய் அதிட்டித்து வந்து சிவஞானம் வாயிலாக உண்மை முத்தியைக் கொடுத்தருளுவார்.

திருக்களிற்றுப் பாடியார்

1. முடிபுசில பரமபதியாகிய பரமசிவன் தொழிற்பட்டாலன்றி யாதுந் தொழிற்படாது.
2. ஆன்மாசத்துமன்று அசத்துமன்று இரண்டும் கூடி சதசத்தென்றும் பெயரினையுடையது என்றவாறு
3. கர்த்தாவறிவிப் போனென்றும் ஆன்மா அறிவித்தாலன்றி அறியா.
4. ஆன்மாவினியல்பு படிகம் போலடுத்ததின் தன்மையாய் இருக்கும். அது எங்கும் வியாபகமாய் அதுவதுவாய் நிற்பது.
5. ஆன்மா கிருபையே தாற்பரியமாய்த் திருமேனிகொண்டு தனக்குச் சுதந்தரமில்லையென்பதை அறிந்து தான் அந்த ஞானமாய் நிற்கவே அரனைத் தரிசிக்கும்.
6. ஒருருக் இருவழி தோற்றினவிடத்துச் செல்வானுக்குத் திகைப்புண்டாவது போலக் கன்மத்துலை யொப்பிலே சத்திக்குத் திகைப்புண்டாகும். அதுவே சத்தி தன் தொழில் செலுத்தாதிருத்தல்.
7. அவ்வவ்விடங்களிலே சிவபிரானிறைந்திருப்பதும் ஆன்மா பொருந்தியிருப்பதும் எப்படியெனின் உடலுயிரும் கண்ணுமாதித்தனும் ஆன்மபோதமுங் கண்ணொளியும் போல.
8. காயநீக்கம் சரீரத்திலே தீக்ஷாக்கிரமங்களிலே மலங்களைப் போக்கும்
9. கன்மமும் ஆன்மாவும் சிவமும் அநாதியென்பதும் அவரவர் அர்ச்சித்த கர்மத்தைக் கர்த்தாவே காட்டி முடிப்பர்.
10. சிவனும் ஆன்மாவும் எக்காலமும் இடை விடாமலிருக்கையிலே ஆன்மா மலத்திலே பற்றின படியினாலே சிவனிடத்திலே கூடி நிற்கும் பற்றில்லை யாகையால் அச்சிவன் பெத்தத்திலொத்திருப்பன்.

சித்தாந்தம் என்பது முடிந்த முடிபு : எனப் பொருள் தரும். அது சித்தம் + அந்தம் எனப்பிரிக்கப்படும். அந்தம் + முடிபு, சித்தம் – சித்தித்தது. அதாவது கிடைத்தது என்று பொருள்படும். எனவே ஆராய்ச்சி, அநுபூதி என்னும் இரண்டாலும் நமக்குக் கிடைத்ததாகிய முடிந்த முடிபு என்பதாம். எனவே சித்தாந்தம் என்றும் சொல் ஒருவன் ஒரு விஷயத்தை சொல்லியவழி அவ்விஷயத்தில் பலருக்கு ஐயப்பாடு தோன்ற அப்பலரும் தாம் தாம் கண்ட அளவிலே தமது கருத்தைக் கூற அப்பொழுது முற் கூறியோன் இன்ன இன்ன காரணங்களால் தான் கூறிய விஷயமே பொருத்தமானதென்று துணிந்த இடத்து வழங்கப்படுவது என்பது புலனாகின்றது இதனால் சித்தாந்தமே முடிந்த முடிபு. இதனை மறுத்துக் கூறுவாழுமுளர் எல்லாவற்றிற்கும் நாம் ஓர் உதாரணத்தை எடுத்து ஆள்வோம் "கஸ்தூரியின் வாசனையானது மக்களால் வெறுக்கப்படுவதில்லை. மேலும் ஏதுக்களால் சாதிக்கப்பட்டுத் தனவந்தர்களால் எப்பொழுதும் முகரப்படுகிறது. இஃது அவரவர் கொள்கையைக் காட்டுவதாகும்.

அதீத சமயமகிய சித்தாந்தத்தை மேற்கொண்டவர்கள் வேதம், சிவாகமம் என்பனவற்றில் கூறப்பட்டவற்றிற்குச் சிறிதும் மாறுபாடின்றி பதி, பசு, பாசம் என்னும் மூன்று பொருள்களின் தடத்த சொரூபலக்ஷணங்களைக் கொள்வர் "பல கலை ஆகம வேதம்யாவையினும் கருத்துப் பதி, பசு, பாசம் தெரிதல் என்று அருளிச் செய்தனர் ஸ்ரீ உமாபதி தேவநாயனார்.

*"சான்றவர் ஆய்ந்திடத் தக்கவாம் பொருள்*
*மூன்றுள மறையெலாம் மொழிய நின்றன*
*ஆன்றதொர் தொல்பதி ஆருயிர்த் தொகை*
*வான் திகழ் தளைஎன வகுப்பர் அன்னலே"*

கர்த்தாவையுஞ் சத்தியையும் மூன்று வகைப்பட்ட ஆன்மாக்களையும், மலங்களையும், பஞ்ச கிருத்தியத்தையும் மூன்று வகைப்பட்ட ஆசாரிய மூர்த்தியையும் தீக்ஷா கிரமங்களையும், பதமுத்திகளையும், சாயுச்சியத்தையும் சத்தாகவேக பரதேசியுமல்ல, பரிபூரணனுமல்ல பூவினிற்கந்தம் போலப் பக்குவங்களிலே பிரகாசிப்பனென்னுமுறைமையையும் அவன் கிருபாமூர்த்தியென்னு முறைமையையும், சர்வத்தையுங் கூடி நிற்கச் செய்தே தானென்னேரந்முந் தோய்விலனென்னு முறைமையயு அறிவிக்கிறார்.

*திருச்சிற்றம்பலம்*
*சிவ சிவ*



**சைவசித்தாந்த நூலைச் சிறப்பிக்க எடுத்தாண்ட புத்தகங்களின் உள்ளீடு**

**ஸ்ரீ ஆலால சுந்தரம்பிள்ளை அவர்கள் குறிப்பீடு.**

சங்கற்ப நிராகரணத்தைக் கொண்டு பூர்வ க்ஷிகளால் கூறப்படும் சங்கற்பங்களை யெல்லாம் செய்து உண்மை நெறியை விளக்கமாக உணர்ந்து அந்நெறியிலே நெஞ்சை தூதாக விடுத்து பஞ்சாக்கரமாகிய கொடிக்கவியைக் காட்டி பஞ்சாக்கரப் பொருளாய் விளங்கும் பரசிவமாகிய நடராசமூர்த்தியைப் போற்றிப் பஃறொடையால் போற்றி அந்தநடராசமூர்த்தியாகிய குரு மூர்த்தியை வினாவெண்பாவால் திரியதார்த்த இலக்கணங்களை வினவி திருவருட்பயனால் வினவிய திரிபதார்த்த இலக்கணங்களின் பயனை உயர்ந்து உண்மை விளக்கத்தால் அப்பயனுளிருக்கும் உண்மையை விளக்கமாக இருபா இருபஃதால் (ஆசிரியப்பா, வெண்பா) சிவ என்றும் இரண்டெழுத்துக்களையும் உணர்ந்து சிவப் பிரகாசத்தால் சிவம் பிரகாசிக்கப்பெற்று சிவஞானபோதத்தால் தற்போதய நிகழ்ச்சி யெல்லாம் சிவஞானபோத நிகழ்ச்சியேயாய் திருக்களிற்றுப்பாடியரால் அச் சிவஞானச் செல்வம் மேலிட சிவோகம்பாவனை என்னும் களிற்றின் மேலேறி திருவுந்தியாரால் அச்சிவ நிலையிலே சோபானக் கிரமத்தால் உந்தப்பட்டுச் சென்று குஞ்சிதபாத நிழலிலே இருந்து என்னும் அடிமை நிலை குறையாமல் ஆட்சி செய்து போரானந்தப் பெருவாழ்விலே திளைத்துக் கும்பிட்டிருக்கும் பெரு வாழ்வே வாழ்வாக உயிர்தலைப்பட்டிருத்தலை நன்கு தெளிவோமாக. என ஸ்ரீ ஆலால சுந்தரம்பிள்ளையவர்கள் குறிப்பிடுதலையும் சிந்திப்போம். ஆகவே சைவசித்தாந்தத்தின் சிறிது துளியையாவது அறிந்து உய்யவழி வேண்டுமானால் இந்நூல்களை ஒழுங்காக ஒரு குருவைப் பின் பற்றி ஆராய வேண்டுமென்பதால்.

*திருச்சிற்றம்பலம்*

*சிவ சிவ*

# பின்னுரை

*சிந்தாந்தத் தேசீவன், மத்திசித் தித்தலாற்*
*சித்தாந்தத் தேநிற்போர் முத்திசித் தித்தவர்*
*சித்தாந்த வேதாந்தஞ் செம்பொரு ளாதலால்*
*சித்தாந்த வேதாந்தங் காட்டுஞ் சிவனையே*

திருமந்திரம் 2394

அநாதிமல முத்தராகிய சிவபெருமான் ஆன்மாக்கள் உய்யும் பொருட்டு அருளிச் செய்த முதந் நூல்கள் வேதம் சிவாகம் என்றும் இரண்டுமாம். சிவபெருமான் எவ்விடங்களிலே நின்று அருள் செய்வார். சிவலிங்கம் முதலாகிய திருமேனிகளிடத்திலும் சிவனடியாரிடத்திலும் சைவபாசாரியார் இடத்திலும் நின்று அருள் செய்வார். வேதம் நான்கு அவை இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்பன வாம் சிவாகமம் இருபத்தெட்டு, காமிகம், யோகஜம், சிந்தியம், காரணம், அசிதம், தீப்தம், சூக்குமம், சகச்சிரம், அஞ்சுமான், சுப்பிரபேதம், விஜயம், நிச்சுவாசம், சுவாயம்புவம், ஆக்கினேயம், வீரம், இரௌரவம், மகுடம், விமலம், சந்திரஞானம், முகவிம்பம், வாதுளம் என்பனவாம். இவை மூலாகமங்கள் எனப் பெயர் பெறும். இக்காமியம் முதலிய ஆகமங்களின் உபாகமங்கள் இருநூற்றேழு. வேதம், ஆகமம் என்றும் இரண்டும். தனித்தனி கன்மகாண்டம், ஞானகாண்டம் என இரு வகைப்படும்.

வேதத்தின் கன்ம காண்டத்தில் வேள்வி முதலிய கன்மங்கள் பெரும்பான்மை விரிவாயும் பதி, பசு, பாசம் முதலிய (இறை, உயிர், தளை) முதலிய ஞானகாண்டம் பொருள் ஞான யோகம் என்பன சிறுபான்மையாய்ச் சுருக்கமாகவும் சொல்லப்படும். வேதத்துக் கன்ம காண்டத்தில் சுருக்கிக் கூறப்பட்ட பதி,பசு,பாசம் முதலிய ஞான காண்டப் பொருளை வேதத்தின் ஞான காண்டம் விரித்துக் கூறும். இது வேத சிரசு எனவும் உபநிடதம், வேதாந்தம் எனவும் பெயர் பெற்று நிலவும்.

ஆகமத்தில் சரியை, கிரியை, யோக, ஞான பாதம் கூறப்படும். ஞானபாதங்கள் ஞானத்துச் சரியை, ஞானத்து கிரியை, ஞானத்து யோகம், ஞானத்து ஞானம் என நான்காக வகுக்கப்படும். ஆகமத்தின் கன்மகாண்டத்தில் சரியை, கிரியை, யோகம் முதலியன கூறப்படும்.



வேதாந்தம் பதி, பசு, பாசம் ஆகியவற்றை நித்திய பதார்தங்கள் என்று விரித்துக் கூறும். ஈண்டு வேதாந்தம் எனப்படுவன ஈசாவாக்கியம் தொடக்கம் சரபம் சிவசங்கற்ப முதலிய 28 உபநிடதங்களே.

சிவாகமங்கள் சரியாபாதம், கிரியாபாதம், யோகபாதம், ஞானபாதம் என நான்கு வகை. புறத்தொழில் மாத்திரையாற் சிவபெருமானது உருவத் திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு சரியை எனப்படும் புறத்தொழில் அகத்தொழில் ஆகிய இரண்டாலும் சிவபெருமானது அருவத் திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு கிரியை எனப்படும். அகத் தொழில் மாத்திரையாள் சிவபெருமானது அருவத் திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு யோகம் எனப்படும். இவைகளை விரித்துக் கூறும் ஆகமப்பகுதி. சரியாபாதம், கிரியாபாதம், யோகாபாதம் என்பன அகண்டா காரநித்த வியாசகச் சச்சிதானந்தப் பிழம்பாகிய சிவத்தை ஞானத்து சரியையாகிய கேட்டல், சிந்தித்தல், தெளிதல் ஞானத்தில் ஞானமாகியவற்றை நிட்டை அறிவோர் கூறுவர். இந்த ஞானபாதம் சரியை முதலிய மூன்று பாதங்களின் முடிவிலே பேசப்படலால் அது ஆகமாந்தம் எனப்படும். காமியம் முதல் வாதுளம் இறுதியாக இருபத்தெட்டு ஆகமங்களிற் சரியை முதலிய நான்கு பாதங்களுண்மையால் ஞானபாதங்கள் எல்லாம் சித்தாந்தம் எனப் பெயர் பெறும்.

இங்ஙனம் வேதத்தின் அந்தமாகிய வேதாந்தமும் ஆகமத்தின் அந்தமாகிய ஆகமாந்தமும் பதி,பசு,பாச முதலியவற்றைச் (இறை, உயிர், தளை) சாமியமாக பிரதி பாதித்தலினாலன்றோ திருமூலநாயனார். "நாடி விரண்டந்தம் பெரியோர்க் கபேதமோ என்றருளிச் செய்தார். இருபத்தெட்டு ஆகமங்களுள்ளே இறை, உயிர், தளை என்றும் தலையங்களில் (பதி, பசு, பாசம்) ஆராயும் பொருட்டு ஆசைகொண்டு இச்சிறு கட்டுரைகளை ஒன்றாக்கி சைவசித்தாந்த தொடக்க அறிவினைக் கொண்டு இக்கைநூலை ஆக்கியுள்ளேன்.

ஞானகாரியர் முழு முதல்வனேயாவர். சாதாரண கல்வி கற்பிக்கும் ஆசிரியர்களிடத்தும் இம் முதல்வனே கலப்பால் தன்மையாய் ஒன்றி நிற்று அறிவுறுத்துகின்றான் ஆவன். ஆனால் ஞானசாரியன் பொருட்டன்மையால் வேறாய்ச் சிறந்து விளங்குவான். இது தயிரில் நெய்மேலோங்கி நிற்பது போன்றது, ஆன்மாவின் செல்வியை திருவருளேயன்றி வேறொருவரும் உணர்தல் இயலாது, ஞானசாரியராகிய முதல்வன் தன்னில் வேறல்லாத திருவருளினால் நம் பொருட்டுத் திருவுருக் கொள்ளுகிறான். அந்த ஞானசாரியனை முழுமதலாகக் கொண்டு வழிபடுவதே நாம் ஞானமுற்று வீடு பெறும் முறையாகும்.

"ஏகனுமாகி யனேகனு மானவன்
நாதனு மாகு என் றுந் தீபற
நம்மையான்டான் என்றுந் தீபற"

திருவுந்தியார்

ஆன்மா மும்மலத்தினாலும் மூவகையாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஆன்மாவுக்குச் சாக்கிரம், சொப்பணம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்று ஐந்து அவஸ்தைகள் உண்டு. இந்த ஆன்மநிலைகளை நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படக்கம் என்றும் கூறுவர்.

சைவ சித்தாந்தம் என்பது பரந்த விடயம், சைவம், சித்தாந்தம் என இருபெரும் விடயங்களை உள்ளடக்கியதேபோல மற்ற எந்தச் சமயங்களிலும் சித்தாந்தம் உண்டு. இவைகள் வேறு வேறுகுண நிலைகளை உணர்த்தும். நாம் முதலில் சைவத்தை நன்கு அறியவேண்டும். அதன் பின்னரே சித்தாந்தத்தை உணரவேண்டும். இச் சொற்றொடரும் சித்தம் = அந்தம் என இரண்டாகும் சித்தம் மிகக் கூர்மையானது. சிந்தித்தல் என்றதின் அடிப்படை சித்தம் இலகுவாக மணிவாசகப் பெருமான் சித்தமழகியார் பாடாரோ நஞ்சிவனை என்றார். எல்லா அவயங்களினதும் அழகைக்காணலாம். சித்தமழகாக உள்ளவர்களைக் காணமுடியாது.

சைவ சித்தாந்தம் என்பது சைவசமயிகள் தங்கள் வாழ்க்கை நெறியில் இருந்து பிளிந்தெடுக்கப்பட்ட கரும்புக் கட்டியாகும். வேதம், ஆகமம் என்னும் இரண்டும் வழிகாட்டிகளாயினும் வேறு வேறான பாதைகளைக் காட்டுகின்றன. பதின்மூன்றாம் நூற்றாண்டில் தொகுக்கப்பட்ட மெய்கண்ட சாஸ்திரங்கள் ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த சமய குரவர்களின் கொள்கைக்கு ஏற்றவையாய் இருந்தன என்பதை ஆராய்வதே நமது கட்டுரையாகும். இத்தன்மையினாலே நூல்களை எழுதி வெளிப்படுத்துவதை ஒரே எண்ணமாய்க் கொள்ளாமல் நம் சமய குரவர்களில் இருக்கிற சைவசித்தாந்தத்தை ஊகித்து உணர்ந்து கட்டுரைகளை ஆக்கி அறிவை மற்றவர்க்கு உணர்த்த வேண்டும் அவ்வுணர்வைப் பெற்றவர்களே சைவசித்தாந்த நூல்களை வாசித்து அறிந்து கொள்வார்கள்.

அது எவ்வாறாயினும் சைவசித்தாந்த உணர்வுக்கு குருவே முதலானவர் ஆவர். அவரைக் கண்டு பிடித்து ஆவனவற்றை கேட்டு அறிய வேண்டும்.

ஓரளவு அறிவுவந்த சைவ சித்தாந்திகள் மற்றவர்களை தம்முடன் ஒப்புநோக்க வெளிப்படுகிறார்கள்.



நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம், சூரியன், சந்திரன், ஆன்மா இவை எட்டும் சிவபெருமானுடைய அட்ட மூர்த்தங்களாகும். சிவத்தை அதிட்டிப்பவர் அப்பரம் பொருளை அடைவர், சிவபெருமான் அட்ட மூர்த்தியாய் நிற்பது உலகத்தின் உண்மைப் பொருளாய் நிற்பவன் தாம் என்பதை சிற்றறிவினராகிய ஆன்மாக்கள் அறிந்து உய்யும்படி கொண்டருளிய பெருங்கருணையாம்.

பிருதுவி ரூபமாகிய விக்கிரக வணக்கமும் கங்கை முதலிய தீர்த்த வணக்கமும் நித்திய கைமித்தியங்களிற் செய்யப்படும் அக்கினி வணக்கமும், பஞ்ச பூதங்களிற் செய்யப்படும் பஞ்ச பூதலிங்க வணக்கமும் சிவ பூசை முதலியவற்றிற் செய்யப்படும் சூரிய சந்திர வணக்கமும் குருவையும் சிவனடியார்களையும் சிவபெருமானாகப் பாவித்து வணங்கும் வணக்கமும் பழையன புதியன அல்ல, இவையும் சகலராகிய மும்மலர்த்தார்க்கு வேண்டப்படுவனவாம் இவ்வணக்கங்களுக்கு அவரவர் பாஷைகள் உபயோகிக்கப்படுகின்றன. சில பாஷைகர் இன்று பூரணமானதாய் உலக வழக்கத்தில் வரவில்லை.

இவ் வணக்கங்களை சைவசித்தாந்தம் முதலில் சொன்னது போல ஆகாயத்தில் உயரப்பறக்க வேண்டிய கப்பல் முதலில் ஒரு பாதையில் ஓட வேண்டும் இது எந்த அளவுக்கும் விஞ்ஞானிக்கும் ஒற்றுமை உடையதாகும். அப்படி ஓடு பாதையில் ஓடும் போதே மேற்கூறிய வகைகள் ஊரித்தாய் இருக்கின்றன. இவற்றை சிறு அறிவுடைய சித்தாந்திகள் வெறுக்கிறார்கள் சகலராகிய நாம் எங்கே எங்கே என்று தேடித்திரிய வேண்டும்.

*"இரு நிலனாய்த் தீயாகி நீருமாகி*
*யியமான னாயெறியுங் காற்று மாகி*
*அருநிலைய திங்களாய் ஞாயிறுகி*
*யாகாசமா யட்ட மூத்தியாகிய*
*பெரு நலனுங் குற்றமும் பெண்ணுமாணும்*
*பிற ருருவுந் தம்முருவுந் தாமேயாகி*
*நெரு நலையா யினருகி நாளையாகி*
*நிமிர் புன் சடையடிகள் நிறை வாறே நின்ற"*

அப்பர்

சைவ சித்தாந்தம் அருளாளர்க்கே இனிது விளங்கும் இதனால் அவர்கள் எல்லாரிடத்தும் சிவன் திரு இருக்கிறதென்று எண்ணி வணங்குவார்கள். இவைகள் பிழை என்புகல்வதுபிழை.

திரு மூலநாயனாரும் முன்பே இவ்வாறானவை பிழையில்லை செய்ய வேண்டியன யாவை விடவேண்டியன யானை என வகுத்தும் விரித்தும் தந்திரங்களாகப் பிரித்துக் கூறியுள்ளார். பின்வரும் திருமூலரின் பாவை உற்று நோக்கினால் நன்கு விளங்கும்.

*"வழுதலை வித்திடப் பாகம் முளைத்தது*
*புழுதியைத் தோண்டினேன் பூசனி பூத்தது*
*தொழுது கொண்டோடினார் தோட்டக்குடிகள்*
*முழுதும் பழுத்தது வாழைக்கனியே*

திருமந்திரம் 2394

வழுதலை = <u>கத்தரி</u> கத்தரி விதை மிகவுஞ் சிறியது.ஞான சாதனையில் முதலில் தோன்றுவது புருவ நடுவில் சிறிய துடிப்பு. **<u>பாகல்</u>** பாகற்கொடி பாகற்காய் மிகவும் கசப்புடையது, வைராக்கியமும் உலகக் கசப்பாய் தோன்றுவது. தோட்டக் குடிகள் ஓடுதல் என்பது ஐம்பத்தோர் அக்கரங்களும் வெவ்வேறாகத் தொழிற்படுவதை விட்டு நாதரூபமாகச் சிரசில் வெளிப்படுவது என்றவாறு <u>பூசனி</u> பூசனிமலர், இது மஞ்சள் நிறமுடையது. ஞான சாதனையில் சிரசின் மேல் விளங்குவது மஞ்சள் ஒளி

வாழ் + ஐ + கனி = வாழைக்கனி
வாழ்வில் தலைமை அளிக்கும் கனி, சிவம்
வழுதலையிவித்து – யோகப்பயிற்சி
பாகல் – வைராக்கியம்
புழுதியைத் தோண்டினேன் – தத்துவ ஆராய்ச்சி
பூசனி பூத்தது – சிவம் வெளிப்பட்டது
தோட்டக்குடிகள் – இந்திரியாதி விடயங்கள்
பழுத்தது – கிடைத்தது
வாழைக்கனி – ஆன்மலாபம்

இஃது சைவப் பெரியார் துடிகைக்கிழார் உரை

முற்று முழுதாக ஒரு ஞானா சாரியன் எவ்வாறு இருப்பான் எப்படி கண்டு பிடிப்பது நாமும் அவ்வாறாக வேண்டும் என உணர வேண்டும்.



ஞான சாதனையில் வைராக்கியம் ஏற்பட்டு ஆன்மலாபமாகிய சிவக்கனி கிட்டும் என்பது புதைபொருள்.

ஞானசாதனையாகிய கத்தரி விதையை விதைக்க வைராக்கியமாகிய பாகற்கொடி தோன்றியது. தத்துவ ஆராச்சியாகிய புழுதியைக் கிளறினேன் மஞ்சள் ஒளியையுடைய சகஸ்ரதளமாகிய பூசனி மலர் மலர்ந்தது. சரீரமாகிய தோட்டத்தில் அக்கரங்களாகிய குடிகள் வணங்கி வாழ்வில் தலைமை அளிக்கும் சிவமாகிய வாழைக்கனி சிந்தியது. இயற்கையால் உள்ள வழுதலை வித்தில் இருந்து வாழைக்கனிவரையும் உள்ளவற்றைச் சகலராகிய நாம் உணர்ந்து சிவமாகிய கனியை அடைவதற்கு உரிய வழி வகைகளையும் அவற்றின் இடையூறுகளையும் அவற்றை மேற்கொள்ளும் வகைகளையும் எடுத்து அழுத்தம் திருத்தமாகக் காட்டியுள்ளார்கள். இவ்வாறே நம் சமய குரவர்களுள் ஒருவராகிய திருநாவுக்கரசு நாயனார் அவர்கள் நான் என்றதில் இருந்து அவன் என்று உணரும் வரை அனுபவித்த துன்பங்களையும் இச்சிறு கைநூல் எடுத்துக் காட்டியுள்ளது.

இக்கை நூலில் உள்ளவற்றை நன்கு ஆராய்ந்து இயலாதவற்றை ஒரு குரு மூலம் அணைந்து அறியவேண்டும் என்பதை உன்னியே இப்பாவை உங்கள் முன் வைக்கிறேன்.

இவைகளை வாசித்து அறிந்த நேயர்கள் தாங்களே வாசித்ததின் பலனையும் கீழ்வரும் பாவின் விளக்கத்தைக் கண்டறியுங்கள்.

*"கோயிலும் அஞ்சுள கோபுரம் மூன்றுள*
*கோயில் அடைக்கக் கதவோ ரிரண்டுள*
*கோயில் திறந்து கும்பிட வல்லார்க்குக்*
*கோயிலுக் குள்ளே குடியிருந் தானே*

திருமூலர் திருவாக்கு

திருச்சிற்றம்பலம்

திருமுறையகற்று சித்தாந்தக் கருத்துகளில் துறைபோகியவர்கள். எனினும் திருமுறைகளைத் தோத்திர நூல் என்று வர்ணித்து உள்ளார்களானாலும் அவற்றில் உள்ள சித்தாந்தக் கருத்துக்கள் எங்கெங்கே இருக்கின்றன என்று காண வேண்டும்.

*"தன்மை முன்னிலை படர்க்கை*
*மூவிடனோ"*

பவணந்தியநர் தன்மை, முன்னிலை படர்க்கை என்று நிலையினை வகுத்துள்ளார். தன்மை நான், முன்னிலை நீ, படர்க்கை அவர் நான் என்ற சொல் ஆணவ மலத்தின் அதிகாரம் அதிகரிக்கிறது.

திருவதிகை வீரட்டாமை, நானென்ற இடம் தன்மை,

*"கூற்றாயின வாறு விலக்ககலீர், கொடுமைபல செய்தன நானறியேன்*
*ஏற்றருயடிக்கே இரவும் பகலும் பிரியாது வணங்குவ எனப் பொழுதும்*
*தோற்ற தென் வயிற்றின் அகம்படியே குடரோடு துடக்கி முடக்கியிட*
*ஆற்றேன் அடியேன் அதிகைக்கெடில வீரட்டானதுறை அம்மானே"*

அப்பரின் மனதில் நான் என்ற சொல் உதயமானபோது அறியும் தன்மை அதற்கில்லை அறிவித்தால் அறியும் ஆன்மா நானென்கிற மமகாரத்தை மறைக்க முடியாமல் போய்விட்டார். அந்த இடத்தில் இருந்து, நீ என்ற இடம் முன்னிலை.

*"அப்பன் நீ ஐயனும் நீ அன்புடையமாமனும் மாமியும் நீ*
*ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும் நீ ஒருகுலமுஞ் சுற்றமும் ஒரூரும்*
*துரயப்பனவும் உய்ப்பனவும் தோன்றுவாய் நீ துணையானென்நெஞ்சள் துறப்பாய் நீ*
*இப்பொந்நீ இம்மணிநீ இம்முத்தும்நீ இறைவன்நீ ஏறூர்ந்த செல்வம்நீயே"*

பின்னர் இவனை எங்கே காணலாம் என்று வருந்திக் கண்டு கொண்டார்.

அவன் என்ற இடம் படர்க்கை.

*"மனத்தகத்தான் றலைமேலான் வாங்கினுள்ளான் வாயாரத்தன்னடியே*
*பாடுந்தொண்டர்*
*இனத்தகத்தான்இமையவர்தஞ் சிரத்தின் மேலானேழட்த்தப் பாலனிப்பாற் செம்பொன்*
*புனத்தகத்தான் நறுங்கொன்றைப் போதினுள்ளான் பொருப்பிடையான்*
*நெருப்படையான் காற்றிலுள்ளான்*
*கனத்தகத்தான் கயிலாயத்துச்சியுள்ளான் காளத்தியாளவன் என்கண்படர்க்கை."*

திருவாவுக்கரசு நாயனார்



இது திருநாவுக்கரசு நாயனாரின் திருமுறைத் தொகுதியே நான், நீ, அவன் என்ற நிலையினை உணர்த்துவது, நானென்னும் அகந்தையை அடக்கி எல்லாம் நீயே நிறைந்திருக்கிறாய் என்பதனை உணர்ந்து ஆன்மாக்கள் வினைப்பயனைக் கொண்ட உடம்பிலே எள்ளின் எண்ணெய் போல எங்கும் நிறைந்திருக்கிறான் என்பதை உணரக் கூடியதாக இருக்கிறது. அதுவே சைவசித்தாந்தம் உணர்த்தும் உண்மை நிலையாகும். ஆகவே சைவர்கள் சித்தாந்தத்தை உணரமுதல் சைத்திருமுறைகளை ஓதுவார் மூலம் கேட்டு உணத்துணர்ந்து ஒரு நிலைக்கு வரும் போது அதிலுள்ள சித்தாந்த நிலை புலப்படும்.

உலகில் மக்களாகப் பிறந்தோர் யாவரும் நாடுவது இன்பமே. அந்த இன்பத்தைப் பெறுதற்கு அவர்கள் நாடுகின்ற வழிகள் பலவாம், அவ்வழிகள் அவரவர் அறிவு நிலைக்கேற்ப அமைகின்றன. அவ்வழிகளே சமயங்கள் எனப் பேசப்படுவன. ஒவ்வொரு சமயமும் ஒவ்வொரு பொருள் உண்மையைத் தன்னகத்தே கொண்டிருக்கும். அத்தகைய பொருள்களாவன இறை, உயிர், தளை இம் மூறின் தன்மையையும் கடவுள், உயிர், உலகம், பதி, பசு, பாசம் எனவும் கூறுவர். உண்மையையும் இலக்கணத்தையும் முடிந்த முடிவாகத் தருக்க முறையில் எடுத்தியம்பி உயிர் பெறுதற்குரிய இன்பத்தின் உயர் நிலையையும் அது பெறுதற்குத் தடையாயுள்ள உலகத்தின் இயற்கையையும் உள்ளவாறு கூறி அவ்வின்பத்தைப் பெறச் செய்ய வேண்டிய சாதனங்களையும் தெரிவிப்பது சைவ சமயமாகும். இது இறைவனே கண்டருளியது ஆதலால் சைவம் எனச் சிவசம்பந்தப் பெயராலேயே பண்டு தொட்டு வழங்கப்பட்டு வருகிறது. இச்சமயம் தெளிவாகக் கூறுகின்ற கொள்கைகளே சித்தாந்தம் எனப்படும். ஆதால் சித்தாந்த சமயம் என்பதே சைவ சமயத்தைக் குறிக்கும். ஏனைச் சித்தாந்தங்கட்கு அச்சமயத்தின் பெயர் இணைந்து வழங்கப்படுதல் காணலாம். எல்லாத் தெய்வங்களும் சைவத்துள் அடங்கும் இவ்வாறான தன்மை பெற்றே சித்தாந்த சைவம் என்றும் கூறுவர். மாறி உரைக்கின் சைவசித்தாந்தமாகும்.

மக்களாவர் ஈடேறுவதற்குச் சமயம் இன்றியமையாதது எனக் கண்டோம். சமயங்கள் இவ்வுலகில் பற்பல உள்ளன. ஒவ்வொருமதமும் தான் தான் சிறப்புடையதெனச் செப்பாநிற்கும் இஃது அவ்வச் சமயவாதிகள் கூற்றாம். மக்களின் அறிவு, குணம் முதலான ஒருமைப் பட்டனவல்ல, பல விதங்களாகவுள்ளன. ஆதலின் அவரவர் பண்பாட்டுக்கேற்க கொள்கைகளும்

பலவாயின. ஆனால் எல்லாச் சமயமும் முடிவில் ஒரு பயனையே கொள்ளுந் திறத்தன. ஊர் ஒன்றுக்கு வழிகள் பலவாய் இருத்தல் போல இப்பது இவ்வுண்மை. ஒவ்வொரு சமயமும் ஏதாவது ஒரு கொள்கையை வலியுறுத்திச் சொல்லும் எல்லாச் சமயத்தின் எல்லா நல்ல கொள்கைகளும் வேண்டுவனவே, ஒரு மேல் மாடத்திற்கு ஏறும் படிகள் பல உள. ஒவ்வொன்றும் அதன் தன் உயரத்திற்கேற்றும் எல்லாச் சமயங்களும் இங்ஙனமே உதவுகின்றன. எல்லாச் சமயங்களும் ஓர் இடத்தை அல்லது ஒரு பொருளையே அடையச் செய்கின்ற முறையில் பாடுபடுகின்றன என்றாலும் மக்களின் கருத்துப் பகைமைகளால் கடவுளும் பலராகக் காட்டப்படுகின்றார். உண்மையில் ஒருவனே இறைவன். இந்த உண்மை எல்லா உள்ளங்களிலும் பதிய வேண்டும். துறைமுகங்கள் பல ஆனால் கடல் ஒன்றே எல்லாத் துறையையும் கடல் ஒன்றே பெற்றுள்ளது. துறைமுகம் என்ற பெயரால் கடல் முழுவதும் கட்டுப்படாது. ஊர்கள் பல எல்லாம் உலகம் என்பதனுள் அடங்கும், சாதிகள் இனங்கள் பலப்பல எல்லாம் மக்கள் இங்ஙனமே கடவுளுக்கு வழங்கும் எல்லாப் பெயர்களும் கடவுள் என்ற ஒன்றுள் அடங்கும். எல்லாப் பொருள்களையும் தன்னுள் அடக்கி யாவற்றையும் கடந்திருப்பது கடவுளுடைய ஒரு தன்மை. இங்ஙனம் புறத்தே வியாவித்திருத்தலோடு அமையாமல் எல்லாப் பொருட்களின் உள்ளேயும் தங்கியிருத்தல் உள்ளிருத்தல் என்ற இரண்டும் கடவுளின் இயல்புகளாம். இதனாலேயே கட எனவும் உள் எனவும் எதை இரு சொற்களைச் சேர்த்து கடவுள் என ஒரு நாமம் இட்டனர் பெரியோர். இதே பெயரை வேறு சொல்லால் கூறுகையில் சிவ என வழங்கினர் சிவ என்ற சொல்லிலும் சிகாரம் கடந்து நிற்றலைக் குறிக்கும் குறியீடாகும். வகாரம் ஊளீடாய் நிந்தலைக் குறிக்கும் குறியீடாகும். இரு சொற்களும் ஒரே கருத்துடையன என உணரலாம்.

சிவம் வியாபகமுடையது. வியாபகமாவது கடந்து நிற்றல். கடந்து நிற்றலால் எங்கும் நிறைந்துள்ளது.

"ஏது சமயங்கள் பொருள் உணரும் நூல்கள் ஒன்றோடொன்ன்று உள பலவும் இவற்றுள் யாது சமயம் பொருள் நூல் யாதிங்கெனில் இதுவாகும் அதுவல்லது எனும் பிணக்க தின்றி நீதியால் இவை யெல்லாம் ஒரிடத்தே காண நின்றது யாதொரு சமயம் அது சமயப் பொருள் நூல் என ஸ்ரீ அருணந்தி சிவாசாரியார் ஓதலுற்றனர் என்க.

இம் முப்பொருள்களையும் எடுத்துக் கூறுவது சைவ சமயமே. இம் மூன்றின் பொதுவும் சிறப்புமான இயல்புகளை எடுத்தோதியும் பதியினைப் பாசத்தை



நீக்கி அடையும் முறையை அறிவித்தும் சுத்த அத்துவைத இன்பத்தை எடுத்துக் காட்டியும் முடித்துக் கூறும் இயல்புடையது.

உலகத்தில் உள்ள எல்லாப் பொருள்களும் மூன்று பிரிவுகளில் அடங்கும். அறிவிக்காமலே அறியும் பொருள் ஒன்று. அறிவித்தால் அறிந்து, அறிவிக்காவிட்டால் அறியமாட்டாத பொருள் மற்றொன்று. அறிவித்தாலும் அறியமாட்டாத பொருள் வேறொன்று.

இந்த முப்பொருள்களையும் பதி, பசு, பாசம் (இறை, உயிர், தளை) என்று சைவ சித்தாந்தம் கூறும். இம்மூன்றும் என்றுமிருப்பவை. அறிவித்தாலும் அறியமாட்டாத பொருள் (சடம், அசித்து) ஏனைய இரண்டினுள் ஒன்றாக ஒரு போதும் மாறமாட்டாது. அறிவிக்காமலே அறியும் பொருளும் (சித்து) அவ்வாறே ஏனைய இரண்டினுள் ஒன்றாக மாறமாட்டாது. அதுபோலவே அறிவிக்க அறியும் பொருளும் (சிதசித்து) மற்றொன்றாக மாறமாட்டாது. பதி, பசு, பாசம் (இறை, உயிர், தளை) என்றும் இம்மூலப் பொருளுமே இப்பிரபஞ்ச ரூபமாய், காரண காரியத் தொடர்புடையனவாய் உள்ளன. இக்காரண காரியத் தொடர் நிகழ்ச்சிக்குத் தொடக்கமோ ? முடிவோ கூறமுடியாது. ஆதலால் இம்மூன்றும் அநாதி என்று கொள்ளப்படும்.

முப்பொருள்களும் வெவ்வேறு பிரிவைச் சேர்ந்தனவாய் இருப்பினும் ஒன்றோடொன்று தொடர்புடையனவாய் இருக்கின்றன இவற்றை முன்னேயும் கூறியுள்ளேன். இத்தொடர்பை வியாபகம், வியாப்பியம், வியாத்தி என்று சைவ சித்தாந்தம் கூறும். இதனை ஓர் உதாரணம் மூலம் விளக்கலாம். பால் தேனீர் ஓர் குவளையில் இருக்கிறது. குவளையில் உள்ள இடம் (கொள்ளும் இடம்) வியாப்பகத்துக்கு உவமை, தேநீர் உள்ள பால், தேயிலைச் சாயம், வெல்லம் ஆகிய மூன்றும் வியாத்திக்கு உவமை, இடத்தின் வியாபகம் தேநீர் ஆகும். பால் முதலிய மூன்றுக்கும் தனக்குள்ளே அடங்கி இருக்க ஆதாரமாக இருப்பதோடு இவற்றுள்ளும் விரவி இருக்கிறது. இவ்வாறே பதியின் வியாபகத்துள் பசு வர்க்கமாகிய உயிர்களும் பாச வர்க்கமாகிய மும்மலங்களும் உலகமும் அடங்கி இருப்பதோடு இவ்வியாபகமும் இப்பொருள்கள் எல்லாவற்றுள்ளும் ஊடுருவி நீக்கமற நிறைந்திருக்கிறது. தேநீராகிய வியாப்பியத்துள் பால், தேயிலைச் சாயம், வெல்லம் ஆகிய மூன்றும் வியாப்பியத்துள் ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங்களும் வியாத்தியாய்

உள்ளன. இந்த வியாபக, வியாப்பிய, வியாத்திற் தொடர்பை விளக்குவதற்கே இறைவன் உலகெலாமாகி, வேறாய், உடனுமாய், நிற்பன் என்று சொல்லுவர்.

வாதத்தினாலும் தக்கத்தினாலும் உண்மைப் பொருளை அறிய முடியாது என்பது உண்மை. நாம் கி. மு. 3000ம் ஆண்டு தொடக்கமாக இன்றுள்ள நிழற்கால ஞானியாகிய யோகசுவாமிகள் வரை இயன்ற அளவு கூறினேன். முடிந்த முடிவு என்பவராம். யார் வாய்க் கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு என்று கூறிக்காட்டிக் காலத்தை விட்டுளார். நாம் எப்படி மெய்ப்பொருள் காண்பது? இதுதான் சைவசித்தாந்தம் மிக மெதுவாய்க் கூறிவருகிறது.

பதி, பசு, பாசம் (இறை, உயிர், தளை) என்று கூறி இப்போ பாசமாம். எனினும் மாயைக்கு வந்து கூறியிருக்கிறேன். சைவ சித்தாந்தத்தில் மாயைப் பற்றிய பகுதி மிகவும் நுணுக்கமானது என்று கூறப்படுகிறது. நாம் சடம் என்னும் போது சடப் பொருளாகிய மூலகாரணியமான மாயைக் கருதுகிறோம். தளை உலகம் முழுவதும் வியாபித்து எல்லோரையும் பிடித்திருக்கிறது. ஆணவம், கன்மம், மாயை என்று வகுத்து ஆன்மாவை மூவகையாக்கி இவ்வளவாகக் கூறியுள்ளோம். இவை மூன்றும் தளை என்னும் பெரும்பகுதியில் அடங்கும்.

இப்பிரபஞ்சத்திற்கு முதற்காரணம் மாயை. துணைக்காரணம் சக்தி. நிமித்த காரணம் இறை.

*"காரிய காரணங்கள் முதல்துணை நிமித்தம் கண்டாம்*
*பாரின் மலர் திரிகை பண்ணுமவன்முதல் துணை நிமித்தம்*
*தேரின் மண் மாகையாகத் திரிகைதன் சித்தியாக*
*ஆரியன் குலால னாய்நின்று ஆக்குவன் அகிலமெல்லாம்"*

*சிவஞான சித்தியார் **147ம் செய்யுள்***

*திருச்சிற்றம்பலம்*

*சிவ சிவ நம பார்பதியே*



**மண்ணும் கடல் வானம் மங்கிமடிந்தாலும் மறக்க முடியாது**
**நினைவில் இருத்தும்**

# நன்றிக் கடன்

*சைவசித்தாந்தம் என்றும் மாபெருங் கடலில் மழைத்துளி போன்று "சைவசித்தாந்தம்" என்னும் தலையங்கம் என்னைத் தடுமாற வைத்தது. ஆறாவது உலக சைவப் பேரவை தஞ்சாவூரில் நடந்த போது, இறை, உயிர், தளை என்னும் பெரிய தலைகளில் கை வைத்து கட்டுரையைக் கட்டவிழ்க்க ஸ்ரீவரதராஜப் பெருமான் வரந்தந்தார். 19-21, 1997 டிசம்பரில் தஞ்சாவூர் பல்கலைக் கழகத்தில் வாசித்து விருதும் பெற்றேன். இது முதலாவதாக, இரண்டாவதாக இங்குள்ள நடத்துனர்களாக முனைவர். சி. லோகநாதன் செயல்நாயகம் அவர்களும், இயக்குனர் மன்றப் பேராசிரியர் க. பாஸ்கரன்* M.A.M. Phil., Phd. *தமிழ்ப் பல்கலைக்கழகம் அவர்களுக்கும், மூன்றாவதாக உலக சைவப் பேரவை இலங்கைக் கிளைத் தலைவர் திரு. கா. தயாபரன் அவர்களும் தொடக்க உரையாக உள்ளனவற்றைத் துணையாகக் கொண்டு நூல் நூற்று துணியாக்க வேண்டும் என மனநிறைவுடன் கூறினார்கள்.*

*மேலே கூறியவர்களின் பெருந் தலைவராக உலக சைவப் பேரவை பெரியார் திருவாவடுமுறை ஆதினத்தார், இருபத்தோராவதின் பின் தலைமையேற்ற சிவநந்தி அடிகளார் வளிமொழிந்து வாழ்த்துரையும் தந்தார். எனவே என்களவு பலித்தது. சித்தாந்தக் கொள்கைகளையும், சைவசித்தாந்த கருத்துரைத்த நூல்களையும் கண்டுகொள்ள கண் கொண்டேன். அவைகளின் அமைவுகளே இச்சிறு சைவசித்தாந்த கைநூலின் கருத்துக்களாகும். எனது அறிவு நிறைவற்றது குறைவுள்ளது எனினும் கூடிய அளவு நூல்களைத் தேடித்தந்து உதவியவர் கொழும்புத் தமிழ்ச் சங்க நூல் நிலைய பொறுப்பாளர் ஸ்ரீமதி ஜெயஸ்ரீ அசோக்குமார் அவர்கள்.*

இவ்வாறு ஆற்றுப்படுத்தி ஆய்வரங்கில் அமரவைத்த பெரியோர்களுக்கும் மனமார்ந்த நன்றி உரித்தாகுக.

ஸ்ரீ வரதராஜ விநாயகர் அறங்காவலர்களாகிய அறவழி ஒழுகும் திருவாளர் தெய்வநாயகம், ஈஸ்வரன் அவர்களும் திருவாளர் பொன்னம்பலம் பாலசுந்தரம் அவர்களும் என்னை ஓர் பொருளாகவும் அருளாளர் ஆகவும் மதித்து தங்கள் ஏகமனதான எண்ணங்களை தங்கள் சபையில் வெளிப்படுத்தி ஏற்றுக் கொள்ளச் செய்தார்கள் அவர்களின் தொடர்பான விளக்கே இப்போ ஏற்றியிருக்கும் சைவ சித்தாந்தக் கைநூல் ஆகும்.

இக்கைநூலை ஆக்கத்தின் தொடக்கமாக ஆற்றுப்படுத்திய திரு. குமாரசுவாமி சோமசுந்தரம் அவர்களையும், நூலின் பொருட்குறிப்புக்களை நன்கு வாசித்துத் திருத்திய விஸ்வநாதர் சங்கரப்பிள்ளை அவர்களையும் நூலிளையே நூலாகவரும் என்பதை உணர்ந்து எழுத்துப்பிழை இளையோடிருந்ததை கண்ணாரக் கண்டு திருத்தி உதவிய ஸ்ரீமதி மங்கையர்க்கரசி மயில்வாகனம் அவர்களையும் ஸ்ரீமதி பத்மாவதி சிவசுப்பிரமணியம் B. A. அவர்களையும் இப்பந்தியில் சேர்த்துள்ளேன்.

இக்கை நூலை கையில் இருந்து நெகிழ விட்ட யுனி ஆட்ஸ் பதிப்பக உரிமையாளர் திரு. பொன்னையா விமலேந்திரன் அவர்களையும் சேர்ந்துள்ளேன்.

*கண்ணிரண்டும் ஒன்றேயே காணும் பயனாலும்*
*பண்ணின்றி பாவிற் பயனின்று எனவாங்கு*
*கணனியில் கருத்திருத்தி கனவிலுமென் கைநூலை*
*மணநிறைசெய் பொன்பெருமை விமலேந்திரன் பெருமையே.*

*சிவ சிவ*

*மேன்மைகொள் சைவநீதி*
*வான்மழைபோல் பொழிக பொழிக.*

*திருச்சிற்றம்பலம்*



## தஞ்சாவூர் ஆறாம் உலகச் சைவ மாநாடு








உலக சைவப் பேரவையின் இலங்கைக் கிளைத் தலைவர் திரு. கே. தயாபரன் அவர்கள் 1997 டிசம்பரில் தஞ்சாவூரில் இடம்பெற்ற 6ஆவது உலக சைவ மாநாட்டின் நிறைவு விழாவில், தமிழ்நாட்டு அரசின் தமிழ் அட்சி மொழி – தமிழ் பண்பாட்டுத்துறை மற்றும் இந்து சமய அறநிலையத்துறை அமைச்சர் மாண்புமிகு முனைவர் மு. தமிழ்க் குடிமகன் அவர்களிடமிருந்து நினைவுப்பரிசினைப் பெறுதல்.



திரு. திருமதி. இரா. மயில்வாகனம் அவர்களும், திரு. திருமதி. தனபாலா அவர்களும், திருவாளர் கதிர்காமநாதன், இலக்கிய செம்மல் செ. குணரட்ணம் தம்பதிகள் இன்னும் சிலர்.







இலங்கையிலிருந்து உலக சைவ மாநாட்டிற் கலந்து கொண்ட ஒரு பகுதி பெண் பிரதிநிதிகளைப் படத்திற் காணலாம். இடமிருந்து வலமாக முறையே, திருமதி. பத்மா குணரத்தினம், செல்வி. தங்கேஸ்வரி கதிராமன், திருமதி. இராஜலட்சுமி கைலாசநாதன், திருமதி சாந்தி பாலசுப்பிரமணியம், திருமதி மனோ ஞானசூரியம், திருமதி யமுனா கணேசலிங்கம், திருமதி. இந்திரா யோகராஜா, திருமதி. வாணி தனபாலா, திருமதி. நீலா தயாபரன், திருமதி. இந்திரா மகாதேவா ஆகியோர் படத்திற் காணப்படுகின்றனர்.



தஞ்சையில் நடைபெற்ற ஆறாவது உலகச் சைவ மாநாட்டில் ஆய்வு நடத்தும் சிவநெறிச் செம்மல் அறங்காவலர் டாக்டர் தி. செந்தில்வேள் – திருமுறைகள் காட்டும் வழிமுறைகள்.



வாசிக்கின்ற நேரமின்மையால் தவிர்த்தல்.



தவிர்த்த பிறகும் நேரம் கேட்டு வாசித்தல்.



கௌரவ காரியதரிசி சிவநெறிச் செல்வர்க. இராஜபுவனீஸ்வரன், க. பாலசுப்ரமணியம், கொழும்பு சைவமுன்னேற்றச் சங்கத் தலைவர் சி. தனபாலா.



## கைநூலை ஆக்க கைகொடுத்து உதவிய நூல்கள்

1. திருமூலநாயனாரின் திருமந்திரம்
2. திருமுறைகள்
3. மெய்கண்ட சாத்திரங்கள்
    1. சிவஞானசித்தியார் சுபக்கம்
       அருணந்திதேவநாயனார்
    2. சிவஞானபோதம்
       மெய்கண்ட தேவர்
    3. திருவுந்தியார் – உய்யவந்த தேவநாயனார்

உண்மைநெறி விளக்கம்

திருக்களிற்றுப்படியார் இருபாவிருபஃது உண்மைவிளக்கம் போற்றிப்பஃறொடை

4. தேவார அருள்முறை திரட்டு
   உமாபதி சிவாசாரியார்
5. திருவருட் பயன் – உமாபதி தேவநாயனார்

ஐந்தெழுத்துநிலை
அணைந்தோர் தன்மை

பதிமுதுநிலை உயிரவநிலை பாசநிலை அருளதுநிலை

அருளதுநிலை உயிர்விளக்கம் இன்புறுநிலை

6. திருவாசகம்
7. திருவாதவூரடிகள் புராணம் – கடவுள் மாமுனிவர்
8. ஸ்ரீகந்தபுராணம் – கச்சியப்பசிவாசாரியார்
9. சிவயோகசுவாமிகள் ஏற்றிய ஞானவிளக்கு – வித்துவான் க. வேலன்

